## நாம் அழைத்ததும் வந்தார் அமைச்சர்; அதிரடியாய் இயங்கினார்!



# கல்கி

KALKI
16.6.96
ரூ. 3.00

## ஆண்களைப் பின்னுக்குத் தள்ளும் பெண்கள்!

சௌம்யா:
'ஓ.கே.' ஆன 'முதல் டேக்!'

# "AN F.D. THAT'S A PASSPORT TO A WORLD-CLASS HOSPITAL ?"

15% OFF on treatment at Apollo!

## HIGHLIGHTS

- 15% concession on all treatment and diagnostic tests at Apollo Hospitals, subject to a maximum of 10% of the value of the Deposit. Certain exclusions apply.
- This discount coupon is transferable to anyone by the deposit holder.
- Personal Accident Insurance for the first named deposit holder equal to the value of the Deposit.
- Post dated interest warrants, encashable at par, will be sent alongwith the Fixed Deposit Receipt.
- A Choice of monthly or quarterly interest warrants.
- Interest commences from the date of receipt of cheque/draft, subject to realisation.
- Deposits from Non-resident Indians accepted with repatriation rights.
- Minimum amount of Deposit accepted is Rs. 3,000 and thereafter, in multiples of Rs. 1,000. Outstation payments must be made through bank drafts.

### Scheme A – Fixed Deposit

| Period of Deposit | Rate of Interest per annum | Interest Payment |
|---|---|---|
| One Year | 15.19% | Quarterly |
| Two Years | 15.19% | Quarterly |
| Three Years | 15.19% | Quarterly |
| 1,2,3 Years | 15.00% | Monthly |

### Scheme B – Cumulative Deposit

| Period of Deposit | Amount payable on maturity of deposit on Rs. 3,000/- | Effective Annual Yield |
|---|---|---|
| One Year | Rs. 3,482 | 16.08% |
| Two Years | Rs. 4,042 | 17.37% |
| Three Years | Rs. 4,692 | 18.80% |

"When I put my savings in a Fixed Deposit with Apollo Hospitals, little did I know that it would be in the best interests of more than just my money! Last week, my mother fell and injured her hip. We wanted her to be in the best hands, so we took her for investigations to Apollo Hospitals. Little did I realise that the Fixed Deposit I had made a year ago would turn out to be such a blessing in disguise! We received special attention, expert care, and a 15% discount on the hospital bill!"

"My mother's recovering fast, we're all happy that things went so smoothly, and my money worked harder than I imagined!"

"Are your savings as safe, hardworking and supportive?"

**APOLLO HOSPITALS**
**Enterprise Limited**

**Regd. Office:** 19, Bishop Garden, Raja Annamalaipuram, Madras – 600 028.
**Hospital Complex:** 21, Greams Lane, Greams Road, Madras – 600 006.
**Administrative Office:** Ali Towers, 22 Greams Road, Madras – 600 006. Phone: 8266956, 8272026, 8255753

Adgraph/AP/596


அரை கிலோ 'தேவே கவுடா ஸ்பெஷல்' போடுப்பா!
என்ன புரியலையா, ஐயா அவியல் மிக்ஸ் கேக்கறாரு!



• "தெப்பக்குளத்தில் ஏன் இத்தனை குப்பை?"

**அறநிலையத்துறை அமைச்சரை அழைத்துக் கொண்டு ஏதாவதொரு கோயிலுக்குச் சென்றால், ஒரு வித்தியாசமான கட்டுரையாக அமையுமே என்று அழைத்துக் கொண்டு போனோம். கிடைத்தது வித்தியாசமான கட்டுரையல்ல; அதிர்ச்சி தரும் விஷயங்கள்...!**

அறநிலையத்துறை அமைச்சர் புலவர் செங்குட்டுவன், திருச்சி மாவட்டத்திலுள்ள வேலக்குறிச்சி என்னும் சிற்றூரைச் சேர்ந்தவர். 52 வயது. தபால் மூலம் பி.ஏ., தமிழ் இலக்கியம் படித்தவர். கவிஞர். அதனால் ஏற்பட்டதுதான் புலவர் என்னும் அடைமொழி. சாதாரண விவசாயக் குடும்பம். இரண்டு மகன்கள்; ஒரு மகள்.

74-ல் தி.மு.க.வின் ஒன்றியச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இவர், மிசா கைதியாக ஓராண்டு காலம் திருச்சி சிறையில் இருந்தவர். "ஜெயிலில் பெரிய அளவுக்கு நான் மிசா கொடுமைகளை அனுபவிக்கவில்லை என்றாலும் குளிப்பதற்குத் தண்ணீர் கேட்டால் தரமாட்டார்கள். அதனால் அப்போது மாதக் கணக்கில் கூட நான் குளிக்காமல் இருந்திருக்கிறேன்!" என்று அந்தக் கசப்பான அனுபவங்களை இப்போது நினைவு கூர்கிறார்.

86-ல் ஊராட்சி ஒன்றியப் பெருந் தலைவரானார். 89-பொதுத் தேர்தலில், மருங்காபுரி சட்டமன்றத் தொகுதியில் போட்டியிட்டார். அப்போது சுயேச்சை வேட்பாளர் ஒருவர் இறந்ததால், தேர்தல் தள்ளி வைக்கப்பட்டது. பிறகு நடந்த போது, இவர் தோற்றுப் போனார். இப்போது அதே தொகுதியில் வெற்றி பெற்று அமைச்சராகவும் ஆகியிருக்கிறார்.



• கோயில் அலுவலகத்தில் சோதனை...

இன்னும் அமைச்சர்களுக்கான வீடுகள் ஒதுக்கப் படாததால் அரசு விருந்தினர் மாளிகையில் தான் வாசம். அறையிலுள்ள ஏசி. இயங்காவிட்டாலும் அது பற்றிக் கவலைப் படாமல் தங்கியிருந்த அமைச்சரைச் சந்தித்தோம். விருந்தினர் மாளிகையின் அருகிலுள்ள நாயர் கடையிலிருந்து டீ வரவழைத்துக் கொடுத்து உபசரித்த அமைச்சர், "ஏதாவது ஒரு கோயிலுக்குப் போய்ப் பார்க்கலாமென்றீர்களே... எந்தக் கோயிலுக்குப் போகலாம்?" என்றார்.

"அதைப் பிறகு சொல்கிறோம். முதலில் சில கேள்விகள். அதற்குப் பதில் சொல்லுங்

# நாம் அழைத்ததும் வந்தார் அமைச்சர்; அதிரடியாய் இயங்கினார்!

கள். அதற்குள், நம்மோடு வருவதற்கு அறநிலையத்துறை அதிகாரிகள் யாருக்காவது தகவல் சொல்லி வரவழையுங்கள். என்ன காரணம் என்று சொல்லாமல் வரவழையுங்கள்!'' என்றோம்.

அறநிலையத்துறை துணை கமிஷனர்களான ராஜா, தனபால் ஆகியோர் உடனடியாக விருந்தினர் மாளிகைக்கு வரவேண்டுமென்று தகவல் சொல்லப்பட்டது. நாங்கள் அமைச்சரிடம் கேள்விகள் கேட்க ஆரம்பித்தோம்...

''உங்களை அமைச்சராக்கியதற்கு என்ன காரணம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?''

''ஜாதி வித்தியாசம் இருக்கக் கூடாது என்பதுதான் தி.மு.க.வின் கொள்கை. என்றாலும் எல்லா ஜாதியினரும் சமமான சமூக முன்னேற்றம் அடைகிறவரை பிற்படுத்தப்பட்ட ஜாதியினருக்கான சலுகைகளும் பிரதிநிதித்துவமும் கொடுக்கப்பட்டுத்தான் ஆக வேண்டும். இதன் அடிப்படையில், முத்தரையர் சமூகத்தின் பிரதிநிதித்துவம் அமைச்சரவையில் இருக்க வேண்டும் என்கிற அடிப்படையில்தான் கலைஞர் அவர்கள் என்னை அமைச்சராக்கியிருக்கிறார் என்று கருதுகிறேன்.''

''அறநிலையத்துறை அமைச்சராக்கியதற்குக் குறிப்பான காரணங்கள் ஏதும் உண்டா?''

''தெரியவில்லை. தலைவர் கலைஞர் கொடுத்த பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். அவ்வளவுதான்.''

''நீங்கள் அடிப்படையில் ஒரு பக்திமானா?''

''பக்தன் என்பவனுக்கு என்ன அளவுகோல் வைத்துக் கொண்டு இந்தக் கேள்வியைக் கேட்கிறீர்கள் என்று புரியவில்லை. என்னைப் பொறுத்தவரை, உள்ளத்தூய்மையும் நேர்மையான நடத்தையும்தான் உண்மையான பக்தி என்று கருதுகிறேன்.''

''நீங்கள் கோயிலுக்குப் போவதுண்டா?''

''அறநிலையத்துறை அமைச்சராக இருக்கும் நான், கோயில்களுக்குப் போகாமல் இருக்க முடியுமா?''

''அமைச்சராவதற்கு முன்பு?''

''ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்கிற தி.மு.க.வின் கொள்கையைக் கடைப்பிடிப்பவன்தான் நான்.''

''உங்கள் வீட்டில்?''

''கோயில்களுக்குப் போவார்கள்.''

''கடந்த ஆட்சியின் முறைகேடுகள் பற்றி அனைவரும் அறிந்த விஷயம்தான் என்றாலும் அவர்கள், கவனிப்பாரற்ற கோயில்களுக்குக் கூட ஒரு கால பூஜை என்று கொண்டு வந்த திட்டம் மற்றும் பல்வேறு கோயில்களுக்கும் திருப்பணிகள் செய்தது போன்ற செயல்களால், அந்த அரசு ஆஸ்திகப் பெருமக்களை மதிக்கிற அரசு என்று நல்ல பெயரும் பெற்றிருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?''

''திருப்பணிகள் செய்யப்பட்டது என்பது உண்மைதான். ஆனால் அதிலும் எத்தனை முறைகேடுகள், ஊழல்கள் நடந்திருக்கின்றன

• அறநிலையத்துறை அமைச்சர்



என்று தெரியுமா? இதோ பாருங்கள்... (காட்டுகிறார்) எந்தெந்தக் கோயில்களில் திருப்பணிகள் நடந்ததில் எத்தனை லட்சம் ரூபாய்கள் ஊழல் செய்யப்பட்டிருக்கின்றன என்று அ.தி.மு.க. அறங்காவலர்களே எனக்குப் புகார் மனுக்கள் அனுப்பியிருக்கிறார்கள்! இதெல்லாம் எந்த அளவுக்கு உண்மை என்பதை இனிமேல்தான் ஆராய வேண்டும் என்றாலும் திருப்பணிகள் செய்ததில்கூட ஊழல் நடந்திருக்கிறது என்பது மட்டும் நிச்சயமாகத் தெரிகிறது. இதையெல்லாம் நாங்கள் கண்டுபிடிப்போம். தலைவர் கலைஞர் தலைமையிலான எங்கள் ஆட்சியில் நடக்கிற திருப்பணிகள் நிஜமான திருப்பணிகளாக- ஊழலற்ற நேர்மையான திருப்பணிகளாக இருக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்."

"தி.மு.க. என்றாலே ஆஸ்திகர்களுக்கு எதிரான கட்சி என்கிற கருத்தும் சிலரிடையே இருக்கிறதே?"

"பக்தி என்கிற பெயரில் மூட நம்பிக்கைகள் கூடாது என்பது தான் கட்சியின் கொள்கையே தவிர, பக்தியே கூடாது என்பது அல்ல. நாங்கள் ஆஸ்திகப் பெருமக்களை மிகவும் மதிக்கிறோம். எல்லா மதத்தினரையும் சமமாகப் பார்க்கிறோம். மத நல்லிணக்கம் அவசியம் என்று பாடுபடுகிறோம். எனவே, ஒரு சிலரிடையே இருப்பதாக நீங்கள் கூறுகிற கருத்து உண்மையானதல்ல."

"நீங்கள் அறநிலையத்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றதும் முதல்வர் கலைஞர் உங்களிடம் என்ன கூறினார்?"

"நிர்வாகத்தில் நேர்மை, வாய்மை, தூய்மை, நியாயம், ஒழுங்கு ஆகிய அனைத்தும் இருக்க வேண்டும் என்று கூறினார்."

"நிர்வாகத்தில் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?"

"கோயில்களிலிருந்து களவுபோன நகைகள், சிலைகள் ஆகியவற்றில் பத்து சதவிகிதம் தான் இதுவரை கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. மீதி என்னவாயிற்று? இதுவரை ஏன் கண்டுபிடிக்கப்படவில்லை? இதையெல்லாம் ஆராய்ந்து நடவடிக்கை எடுக்கப் போகிறோம். கோயில்களுக்குச் சேர வேண்டிய முப்பத்தைந்து கோடி ரூபாய், குத்தகைதாரர்களிடமிருந்து வசூலாக வேண்டியிருக்கிறது. சட்டத்தின் சலுகைகளைப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் அவர்களிடமிருந்து இந்தத் தொகையை வசூலிப்பதற்கான வழிமுறைகளையும் ஆராயப்போகிறோம். அப்புறம் கோயில்கள் தூய்மையாக இருப்பதும் பசுமையாக இருப்பதும் அவசியம். அதனால்தான் கோயில்களில் மரக்கன்றுகள் நடுகிற திட்டத்தையும் அறிமுகப்படுத்தியிருக்கிறோம்."

நாம் அமைச்சருடன் பேசிக் கொண்டிருந்த இந்தச் சமயத்தில் துணை கமிஷனர் ராஜா வந்து சேர்ந்தார். "சரி, புறப்படலாமா?" என்ற அமைச்சரிடம். "வடபழனி கோயிலுக்குப் போகலாம்..." என்றோம் நாம்.


• கோவில் மண்டபத்தில்

"நானும் வடபழனி கோயிலுக்கு இதுவரை சென்றதில்லை. அங்கேயே போகலாம். ஆனால் ஒரு கார்தானே இருக்கிறது. என்ன செய்யலாம்?" என்று யோசித்த அமைச்சர், "நீங்கள் காரில்தானே வந்திருக்கிறீர்கள்?" என்று துணை கமிஷனர் ராஜாவிடம் கேட்க, "நீங்கள் அவசரமாக அழைத்ததால் நான் ஸ்கூட்டரில் வந்து விட்டேன்!" என்றார் அவர்.

"பரவாயில்லை.... நீங்கள் துணை கமிஷனரோடு காரில் செல்லுங்கள். நாங்கள் பின்னாலேயே ஆட்டோவில் வந்து விடுகிறோம்!" என்று ஆட்டோவில் பின் தொடர்ந்து சென்றோம்.

எந்த விதமான முன்னறிவிப்பும் இன்றி அமைச்சர் வடபழனி கோயிலுக்குள் சென்றார். உள்ளே போவதற்கு முன்பே அர்ச்சனைச் சீட்டையும், அர்ச்சனைக்கான தேங்காய்-பழங்களடங்கிய தட்டையும் காசு கொடுத்து வாங்கிக் கொண்டார்.

ஒவ்வொரு சந்நிதியாக வழிபட்ட பிறகு இறுதியில் மூலவர் முருகன் சந்நிதி. அர்ச்சனைக்காக அமைச்சரின் நட்சத்திரத்தை குருக்கள் கேட்க, "சுவாமி பெயருக்கே செய்யுங்கள்!" என்றார் அமைச்சர்.

சம்ஸ்கிருதத்தில் அர்ச்சனை முடிந்த பிறகு, "தமிழிலும் செய்யுங்கள்!" என்று அமைச்சர் சொல்ல, தமிழிலும் செய்தார்கள்.

அர்ச்சனை முடிந்த பிறகு தெப்பக் குளத்

திற்குச் சென்று, "ஏன் இத்தனை குப்பை கூளங்கள் கிடக்கின்றன? உடனடியாகச் சுத்தம் செய்யுங்கள்!" வாய்மொழியாகவே உத்தரவு பிறப்பித்தார்.

அப்புறம் பிரசாதம் விற்கும் இடம். "எவ்வளவுக்கு தினசரி வியாபாரம் நடக்கிறது?" என்று சிப்பந்திகளிடம் விசாரித்த அமைச்சரிடம், "லட்டு, தேன்குழல், மிளகுவடை, கல்கண்டு, சர்க்கரைப் பொங்கல் போன்ற பிரசாதங்களை இன்னின்ன எடைகளில்தான் விற்க வேண்டும் என்று ஏலக்காரர்களுக்கு ஏதேனும் விதிமுறைகள் விதிக்கப்பட்டிருக்கிறதா?" என்று நாம் கேட்க, "ஆமாம், இதிது இன்னின்ன எடைகளில்தான் விற்கப்பட வேண்டும் என்று நிபந்தனை உள்ளது!" என்றார்கள் உடன் வந்த துணை கமிஷனர்களான ராஜாவும் தனபாலும்.

"அப்படியானால் எடைகள் சரியாக இருக்கின்றனவா என்று எடைபோட்டுப் பார்க்கலாமே?"– இது நாம்.

"உடனடியாக எடை போடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யுங்கள். எடையை ஆபீஸ் ரூமில், என் முன்னிலையில் போடுங்கள்!" என்று கோயில் ஆபீஸுக்குப் போனார் அமைச்சர்.



• ஆலயச் சந்திப்பில்...

தராசும் பிரசாதங்களும் ஆபீஸ் அறைக்குக் கொண்டு வரப்பட்டு எடை போடப்பட்டது.

65 கிராம் இருக்க வேண்டிய லட்டு 30 கிராம்தான் இருந்தது. இரண்டு மிளகுவடைகளின் மொத்த எடை 30 கிராம் இருக்க வேண்டும்; இருந்தது 15 கிராம். தேன்குழல் 35 கிராம் இருக்க வேண்டும். இருந்தது 25 கிராம். 120 கிராம் இருக்க வேண்டிய கற்கண்டு வெறும் 22கிராம்தான் இருந்தது. புளியோதரையும் சர்க்கரைப் பொங்கலும் தலா 120 கிராம் இருக்க வேண்டும். இருந்தது 80 கிராமும், 70 கிராமும்!

அமைச்சருக்கு மட்டுமல்ல; அனைவருக்குமே அதிர்ச்சி! "ஏலம் எடுத்திருக்கும் சூரிய நாராயணன் என்பவர் எங்கே?" அவர் எங்கோ சென்று விட்டதால் பிரசாதக் கடை ஊழியர்களிடம் எடை குறைவான விஷயத்தை எழுதிக் கையெழுத்து வாங்கிக் கொண்டு, "இந்த மாதம் இந்த ஏலக்காரரின் ஒப்பந்தம் முடிகிறது என்று பார்க்க வேண்டாம்; உடனடியாக ஒப்பந்தத்தை ரத்து செய்துவிட்டு, மேற்கொண்டு அவர்மேல் நடவடிக்கை எடுக்கவும் ஆவன செய்யுங்கள். அதோடு, நாளை முதல் கோயில் நிர்வாகமே பக்தர்களுக்குப் பிரசாதம் செய்து விற்க ஆவன செய்யுங்கள்! கூடவே, இனி தமிழகத்திலுள்ள எல்லா கோயில்களிலும் பிரசாதங்களின் விலைப்பட்டியலோடு, இருக்க வேண்டிய எடை விவரங்களையும் எழுதி வைக்கச் செய்யுங்கள். எல்லாம் நாளையே நடக்க வேண்டும்!" என்று அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார் அமைச்சர்.

"இந்த ஏலக்காரருக்கான ஒப்பந்தம் எப்படி வழங்கப்பட்டது? அது தொடர்பான ஃபைல்களைக் கொண்டு வாருங்கள்!" என்று அவற்றைப் பார்த்தபோது, வெறும் இரண்டு பேர்தான் டெண்டர் கேட்டிருந்ததாகவும் அதில் அதிகத் தொகை குறிப்பிட்டிருந்த இவருக்கு வழங்கப்பட்டதாகவும் ரெகார்டு!

"இது வெறும் கண் துடைப்பு. எனவே, இன்னொரு டெண்டர்தாரர் உண்மையானவர்தானா அல்லது பொய்யான ஆளா என்று விசாரியுங்கள். இனி டெண்டர்கள் வேண்டாம். பகிரங்க ஏலம் விடுவதற்கான ஏற்பாடுகளையும் செய்யுங்கள். மேலும் கோயில் கல்யாண மண்டபங்களை வாடகைக்கு விடுவதிலும் ஏதாவது கோளாறு இருக்கிறதா என்பதையும் பார்க்க வேண்டும்!" என்ற அமைச்சர் நம்மைப் பார்த்து, "பார்த்தீர்களா, கோயில் விஷயத்தில் கூட நிர்வாகத்தில் எந்த அளவுக்குச் சீர்கேடும், ஊழலும் மண்டிக் கிடக்கிறது. இதையெல்லாம் தான் முதலில் சீர் செய்ய வேண்டும்!" என்றார்.

"வெளியிலுள்ள பக்தர்களின் காலணிகளை வாங்கி வைக்கும் இடத்தில் கூட 25 பைசாவுக்குப் பதில் ஐம்பது பைசா வசூலிக்கிறார்கள்!" என்றோம் நாம்.

உடனடியாக சம்பந்தப்பட்ட நபர் வரவழைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டு, அவர் மேலும் நடவடிக்கை எடுக்க உத்தரவிடுகிறார் அமைச்சர்.

"இதுபோல் நீங்கள் ஒவ்வொரு கோயிலுக்கும் திடீர் விசிட் செய்து இதுபோன்ற சோதனைகளைத் தொடர்ந்து செய்ய வேண்டும்!" என்றோம் நாம்.

"நிச்சயம் செய்கிறேன்!" என்று நம்மிடம் உறுதியளித்தார் அமைச்சர். நம்பிக்கையோடு விடை பெற்றுக் கொண்டோம் நாம்!

**- இளங்கோவன், ஸ்ரீநிவாசன்.**
படங்கள் : **மேஜர் கே. மூர்த்தி**



# ஆட்டிப் படைக்கும் இரண்டு பெண்கள்!

பங்களாதேஷில் ஆளும் கட்சிக்கும் எதிர்க் கட்சிக்கும் இடையே ஓயாத சண்டை. இந்தப் பக்கம் ஒரு பெண். அந்தப் பக்கம் ஒரு பெண்!

பிரதமர் பேகம் கலிதா ஸியாவின் தலைமையில் ஆளும் கட்சியாக இருக்கிறது பங்களாதேஷ் தேசிய வாதி கட்சி. மூன்று எதிர்க் கட்சிகள். பிரதானமாக அவாமி லீக். அதன் தலைவி ஷேக் ஹஸீனா. ஜதியா கட்சி, ஜமாத்-இ-இஸ்லாமி ஆகியவை அவாமி லீக்கோடு சேர்ந்து கொண்டு கலிதாவுக்கு எதிராகக் கொடி பிடித்துக் கொண்டிருக்கும் மேலும் இரண்டு எதிர்க் கட்சிகள்.

பிப்ரவரி '91ல் நடைபெற்ற தேர்தலில் பேகம் கலிதா ஸியா 'அரியணை' ஏறினார். அவாமி லீக் எதிர்க் கட்சி ஆனது.

மக்கள் சக்தியை ஒன்று திரட்டுவதில் சமர்த்தரான ஷேக் ஹஸீனா பல்வேறு போராட்டங்களை நடத்திய போதும் இப்போது நடைபெற்று வரும் மோதலுக்கான பின்னணி கோரிக்கை ஒன்றுதான்.

'இப்போது நடைபெற வேண்டிய பொதுத் தேர்தல் கலிதா பிரதமராக ஆட்சியில் இருந்தால் சத்தியமாய் நேர்மையாக நடைபெறாது. எனவே தேர்தலுக்கு முன்பு பாராளுமன்றம் கலைக்கப்பட வேண்டும். கலிதா ஸியா பதவி இறங்க வேண்டும். விருப்பு வெறுப்பற்ற, நேர்மையான இடைக்கால காபந்து அரசு ஒன்று தேர்தலை நடத்த வேண்டும்.'

'முடியாது... உன்னால் ஆனதைப் பார்' என்று சவால் விட்டார் கலிதா.

காமன்வெல்த் செகரட்டரி ஜெனரல் அவர்களே நேரில் டாக்கா வந்து, இரண்டு பேரையும் சந்தித்து, பேச்சுவார்த்தைக்கு இணங்கச் செய்தார்.

ஆனால் பேச்சுவார்த்தையின்போது இரண்டு வேதாளங்களும் மீண்டும் முருங்கை மரம் ஏறிவிடவே, 'சீ... போ!' என்று வெறுத்து காமன்வெல்த் செகரட்டரி ஜெனரல் ஊர் திரும்பினார்.

இதற்கிடையில் இந்த வருடம் பிப்ரவரி 15ம் தேதி ஒரு தேர்தலை நடத்தி, தான் வெற்றி பெற்றதாக கலீதா அறிவிக்கவும், எதிர்க்கட்சிகளின் கோபம் உச்சத்தை அடைந்து விட்டது.

ஏற்கனவே பல மாதங்களாக எதிர்க்கட்சியினர் பாராளுமன்றம் போவதில்லை. தங்கள் உறுப்பினர் பதவியையும் ராஜினாமா செய்தார்கள். தேர்தலிலும் வாக்களிக்கவில்லை. அப்படியிருக்க 'இதென்ன வேடிக்கை தேர்தல்! வாக்காளர் இல்லாத தேர்தல்!' என்று கேலி பேசி தேர்தலை ஒப்புக் கொள்ளவில்லை.

கடைசியில் இப்போது வேறு வழியில்லாமல் பதவியிறங்கி, ஜூன் மாதம் 12ம் தேதி பொதுத் தேர்தல் நடத்த முன் வந்திருக்கிறார் கலிதா ஸியா.

உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி தலைமையில் இடைக்கால அரசு அமைக்கப்பட்டிருக்கிறது.

'தலைமை நீதிபதி எங்களுக்கு எதிராகச் செயல்படுகிறார். இப்படியே போனால் தேர்தலை நாங்கள் புறக்கணிப்போம்!' என்று இப்போது கலிதா அச்சுறுத்தி வருகிறார்.

இதற்கிடையில் திடீரென, தன் ஆணைக்குக் கட்டுப்பட மறுத்த பங்களா தேஷ் ராணுவ தளபதி லெப்.ஜெனரல் நஸீம் அவர்களை டிஸ்மிஸ் செய்து, மேஜர் ஜெனரல் மஹ்பூர் ரஹ்மானை தளபதியாக நியமித்தார் அதிபர் பிஸ்வாஸ். இது ராணுவத்தில் பிரிவை ஏற்படுத்த, நஸீம் ஆதரவாளர்கள் டாக்கா நோக்கித் திரண்டு வர, இப்போது ஒரு வழியாக கலாட்டா கொஞ்சம் அடங்கியிருக்கிறது! நஸீம் ராணுவக் காவலில் வைக்கப்பட்டுள்ளார். இது மே 23ம் தேதி நிலைமை.

ஜூன் 12ல் தேர்தல் நடக்குமா? கலிதா- ஹஸீனா பலப் பரீட்சையின் முடிவு என்னவாகும்? ராணுவப் புரட்சி ஏதும் ஏற்படுமா? உலகம் பார்த்துக் கொண்டிருக்கிறது!

**-ராணி மைந்தன்**

# ஆண்களைப் பின்னுக்குத் தள்ளும் பெண்கள்!

* எஸ். லலிதா : அக்கவுண்டன்ஸியில் முதல், காமர்ஸில் இரண்டாவது இடம்.

***ஒவ்வோர் ஆண்டும் மாணவர்களை விட மாணவிகளின் தேர்ச்சி விகிதம்தான் அதிகமாக இருக்கிறது. இந்த ஆண்டு +2 தேர்வை எடுத்துக் கொண்டாலும் மாணவர்களின் தேர்ச்சி விகிதம் 58.79 சதம். மாணவிகளின் தேர்ச்சி விகிதம் 70.06 சதம்! இந்த வித்தியாசத்திற்கு என்ன காரணம்? படிப்பு விஷயத்தில் மாணவர்களுக்கு அப்படியென்ன சிக்கல் இருக்கிறது? மனவியல் நிபுணரான டாக்டர் ருத்ரன் இதற்கான காரணங்களை அலசுகிறார்...***

உண்மையில் ஒருவரது அறிவையும், ஆற்றலையும் ஒரு தேர்வை வைத்து முடிவு செய்து விட முடியாது. தேர்வின் போது இருக்கும் மனநிலை, உடல்நிலை, குடும்பச் சூழ்நிலை ஆகியவை தேர்வு எழுதுபவரின் திறமையைப் பாதிக்கக்கூடியவை. ஆனால் மொத்தமாக, ஒரு புள்ளி விவரப் பட்டியல் கொண்டு பார்க்கும் போது, பொதுவாகச் சில கருத்துக் கணிப்புகள் சரியாகவே அமையும். இந்த நோக்கில் - பெண்கள் ஆண்களைவிட அதிக தேர்ச்சி பெறுவது வருடந்தோறும் அதிகரித்து வருவதால் - ஆண்களைவிடப் பெண்களே படிப்பில் நாட்டமும், கவனமும் அதிகம் செலுத்துகிறார்கள் என்பது உண்மையாகிறது.

இதற்கான காரணங்களை ஆராயுமுன் - பொதுவாகவே படிப்பதில் இந்தப் பருவ வயதிலுள்ளவர்களுக்கு ஏற்படும் மனவியல் சிக்கல்களையும் பிரச்னைகளையும் தெரிந்து கொள்ள வேண்டும். படிப்பு சம்பந்தப்பட்ட மனவியல் பிரச்னைகள் என்றே மனநோய்களின் பட்டியலில் ஒரு பிரிவு உள்ளது.

படிப்பதில் சிக்கல் (reading disorder), புரிந்து கொள்வதில் சிக்கல் (இது பொதுவாகக் கணக்குப் பாடத்தில் வெளிப்படும். arithmetic disorder என்றழைக்கப்படும்), நினைவு வைத்துக் கொள்ள முடியாத பிரச்னை, நினைவிலிருப்பதை வெளிப்படுத்த இயலாத பிரச்னை (disorder of written expression) என்று பல நிலைகளில் மாணவர்களுக்குப் பாதிப்பு ஏற்படக்கூடும்.

இந்த மனவியல் சிக்கல்கள் எதுவும் இல்லாத ஆண் - பெண் குழந்தைகள் பொதுவாக சம அளவில் படிக்கிறார்கள். எனினும் மதிப்பெண் விஷயத்தில் புள்ளி விவரங்கள் பெண்களுக்கே ஆதரவாயிருக்கின்றன.

அமெரிக்காவில் 1974-இல் நடந்த ஓர் ஆய்வில், பெண்கள் ஆண்களைவிடச் சிறப்பாக மதிப்பெண் பெறுவதற்கான காரணங்கள் அலசப்பட்டன.

ஆண்களைவிடச் சிறப்பாகப் படிக்கும் பெண்கள், கடைசித் தேர்வில் மட்டுமின்றி ஆரம்பத்திலிருந்தே அவ்வாறு படிக்கிறார்கள் என்பது தெரியவந்தது. ஆர்வம், உழைப்பு, தினசரி படிக்கும் பழக்கம் ஆகிய மூன்றும்தான் இதற்கு முக்கியமான காரணங்கள்.

எந்த விஷயத்தில் முன்னணிக்கு வருவதாயிருந்தாலும் குழந்தைகள் தங்கள் குடும்பத்தை அல்லது பெற்றோரைச் சார்ந்திருக்க வேண்டியது (அவர்கள் வயதினால்) கட்டாயமாகிறது. எனவே குடும்பச் சூழ்நிலை, பெற்றோரின் எதிர்பார்ப்பு மற்றும் அணுகுமுறை ஆகியவையே ஒரு குழந்தை சிறப்பாகப் படிப்பதற்கான முக்கிய தேவைகள்.

பொதுவாக பள்ளியிறுதியை எட்டும் பருவத்தில்தான் பாலுணர்வு இவர்களிடையே விழித்தெழுகிறது. அதன் உந்துதலால் 'செக்ஸ்' பற்றிய விவாதங்கள், விமர்சனங்கள், வேடிக்கைப் பேச்சுக்கள் எழுகின்றன. எனினும், ஆண் – பெண் இருவரிடமும் இக்காலத்தில் சமஅளவிலேயே இருக்கின்றன என்பதால் ஆண்கள் குறைவாக மதிப்பெண் பெற இதுதான் காரணம் என்று கூறிவிட முடியாது.

பெண் குழந்தைகளுக்கு ஆண் குழந்தைகளைவிட சுதந்தரம் சற்று குறைவுதான். அடிமைப்படுத்தும் எண்ணத்தை விட அச்சத்தின் காரணமாகவே பெற்றோர் பெண் குழந்தைகளிடம் பல நிபந்தனைகளை விதிக்கிறார்கள். பெண் குழந்தைகள் இதனாலேயே தங்கள் சிநேகிதிகளுடன் பழகும் நேரம் குறைகிறது. இந்த நேரம் படிப்பில் செலவிடப்படலாம் என்பது இப்போதைக்கு ஓர் யூகம்தான்.

தொலைக்காட்சியை ஒரு தொல்லை என்று கருதினால் அது ஆண் – பெண் இருவருக்கும் பொதுவான தொல்லைதான். இருவரும் அதற்கு செலவழிக்கும் நேரம் ஒரே அளவாகத்தான் இருக்கிறது. ஆனால் அரைகுறை உடைகளோடு ஒரு பெண் ஆடும் போது, பெண்ணை விட ஆண் அதனால் அதிகம்

••

**பெண் குழந்தைகளுக்கு ஆண்களை விடத் தாங்கள் சிறந்தவர்கள் என்று நிருபிக்கும் ஆர்வமும் இன்றைய மாறிவரும் கலாசார சூழலில் அவர்கள் சிறப்பாகப் படிக்கக் காரணம். ஆண்கள் படிப்பில் கவனம் குறைய இன்னொரு காரணம், போதைப் பழக்கத்தின் ஆரம்பம் இந்த வயதுகளில் சாத்தியம் என்பதுதான். போதை என்றால் கஞ்சா, பீர், விஸ்கி, பிரவுன் சுகர் போன்ற அளவுக்குப் போய் விட வேண்டும் என்பதில்லை...**

••



**• எஸ். முகமதி : வரலாற்றில் சிறப்பு விருது.**

**• கே.பி. மீனா: பொருளாதாரத்தில் முதல் இடம்!**

கவரப்பட்டு, அதன் மூலம் புகழ் கனவுகளில் ஆழ வாய்ப்புள்ளது. இதன் தொடர்பாகப் படிப்பிலும் கவனம் குறைய வாய்ப்புள்ளது.

வெற்றிக்கு ஓர் உந்துதல் தேவை. அது பெண்களிடம் இப்போது அதிகம் உள்ளதாகப் புள்ளி விவரங்கள் காட்டுகின்றன. இதற்குக் காரணம், முன்போல பெண் சமைக்கவும், கொஞ்சம் படிக்கவும் தெரிந்திருந்தால் போதும் என்ற நிலை மாறுவதுதான். பெண்ணும் படிக்க வேண்டும், வேலைக்குச் செல்ல வேண்டும்,



''சாம்பாரில் கரப்பு, சட்னியில் எறும்பு, மிளகாய்ப்பொடியில் ஈ... என்னய்யா இது, பெரிசா ஓட்டல் நடத்தறீங்க ஓட்டல்?''

''காப்பியில் ஏதாவது இருந்ததா?''

''இல்லை.''

''அதைப் பாராட்டத் தெரியலை. பெரிசா சாப்பிட வந்துட்டார் சாப்பிட.''

–வெ. ராஜாராமன்.



"என் மனைவி 'இந்திர விகாஸ் பத்திரம்' மாதிரி!"

"என்ன சொல்றீங்கன்னு புரியலையே?"

"ஐந்து வருஷத்துக்கொரு தடவை இரண்டு மடங்கா குண்டாயிடுவாள்!"

- பாலு

திருமணமானபின் பிரச்னை வந்தால் சொந்தக்காலில் நிற்க வேண்டும் என்ற விழிப்புணர்வு இந்த உந்துதலுக்கு ஒரு காரணமாக இருக்கலாம். வீட்டிலுள்ள பிரச்னைகள் பெண் குழந்தைகளையும் ஆண் குழந்தைகள் அளவுக்கே பாதிக்கின்றன என்றாலும் உணர்வு முதிர்ச்சி (Emotional Maturity) என்பது, பெண்களிடையே சீக்கிரம் ஏற்படுகிறது என்பதால், இந்தப் பிரச்னைகள் தளர்வையும் இறுக்கத்தையும் வெறுப்பையும் ஏற்படுத்துவதை விட, வைராக்கியத்தை உண்டாக்குகின்றன. இந்த வைராக்கியம் காரணமாக தன் வாழ்க்கை இன்னும் சிறப்பாக வேண்டும் என்ற தீர்மானத்தைப் பெண்கள் உருவாக்கிக் கொள்கிறார்கள்.

பெண் குழந்தைகளுக்கு ஆண்களை விடத் தாங்கள் சிறந்தவர்கள் என்று நிரூபிக்கும் ஆர்வமும் இன்றைய மாறிவரும் கலாசார சூழலில் அவர்கள் சிறப்பாகப் படிக்கக் காரணம். ஒரே பெண்ணாக இல்லாமல் சகோதரனோடு இருக்கும் பெண்களுக்கு இப்படி ஒரு போட்டியே உந்துதலாகும்.

அழகிய உடலமைப்பும் ஆடையும் ஆபரணமுமே தங்கள் சிறப்பம்சங்கள் என்று பெண்கள் கருதிய காலமும் மாறிவிட்டது. அறிவுபூர்வமாக, ஆற்றல் ரீதியாகத் தங்களை நிரூபிக்கும் இளையபெண்கள், பள்ளிப் பெண்களுக்கு ஓர் ஆதர்சமாக விளங்க ஆரம்பித்து விட்டார்கள். இந்த ஆரோக்கியமான சமூக மாற்றமும் பெண்கள் கல்வியில் முன்னேற ஒரு முக்கிய காரணம்.

ஆண்கள் படிப்பில் கவனம் குறைய இன்னொரு காரணம், போதைப் பழக்கத்தின் ஆரம்பம் இந்த வயதுகளில் சாத்தியம் என்பதுதான். போதை என்றால் கஞ்சா, பீர், விஸ்கி, பிரவுன் சுகர் போன்ற அளவுக்குப் போய் விட வேண்டும் என்பதில்லை. இப்போதெல்லாம் 'பான்' போடும் பழக்கமும் ஒரு நாகரிகமாக ஆகி வருகிறது. இதுவும் கவனக் குறைவுக்குக் காரணம்.

மேலும் ஆண் குழந்தைகளுக்கு, இன்னும்- இந்த காலகட்டத்திலும், நகர்ப்புற பொருளாதார மேல் தளத்திலும் கூட சலுகைகள் அதிகம். இந்தச் சலுகைகளைப் புரிந்து பயன்படுத்திக் கொள்ளும் பக்குவம் உள்ள ஆண் குழந்தைகள் வெற்றி பெறுகிறார்கள். சலுகைகளைச் சுதந்தரம் என்று எடுத்துக் கொண்டு முதிர்ச்சியடையாத நிலையிலுள்ளவர்கள் தோல்வியடைகிறார்கள்.

எனவே, பெற்றோர்களும் ஆசிரியர்களும் ஆண் – பெண் வேறுபாடின்றி அணுகினால் தான் ஆண் குழந்தைகளிடையே கல்வித் தரம் – திறன் குறைவதைத் தடுக்க முடியும்.

வண்ணப்படங்கள் : ராஜூ நாராயண்

# சுஜாதா பக்கம்



அவ்வப்போது நண்பர்களும் வினோதர்களும் அனுப்பும் புத்தகங்கள் சிலவற்றை இந்தப் பகுதியில் குறிப்பிடத் தோன்றுகிறது. சூலூர் வரலாற்றிலிருந்து திறமையான மரபுக் கவிதைகள் கொண்ட 'குலோத்துங்கன் கவிதைகள்' வரை அவைகளின் வகை வகையான பொருட் சுவைக்காக.

புலவர் செந்தலை கவுதமன் பதிப்பித்திருக்கும் சூலூர் வரலாற்றில் விஸ்தாரமாக ஒரு நகரத்தைப் பல கண்ணோட்டங்களில் ஆராய்ந்து தொகுத்த கட்டுரைகளில் வரலாற்றியல், மானிடவியலாளர்களுக்குச் சுவையான செய்திகள் பல உள்ளன. நெற்றியில் கொட்டைப் பாக்கை வைத்துக் கொண்டு எவரும் சென்றால் சூலூரில் தலைவலியா என்று கேட்பது பழைய வழக்கம். பழுக்கக் காய்ச்சிய ஊசியில் குழந்தையின் நெற்றியில் சூடுவைப்பதும் பழைய வழக்கம். இவ்வாறு வழக்கங்கள், நோய் நம்பிக்கைகள், சமூக இணக்கங்கள், யூனியன் லாந்தர்களுக்கு 1923ல் வாங்கிய 3 டின் சீமை எண்ணெய், ஒன்றரை டசன் சிம்னி, ஒன்பது கசம் நாடா திரி வகையறாவுக்கு பில்லில் கண்டபடி சாங்ஷன் செய்யப்பட்ட 22 ரூபாய் 5 அணா 6 பைசாவுக்கு கணக்கு வரை துணுக்கு விவரங்கள் உள்ளன. இந்த ஊர் இரண்டாயிரம் ஆண்டு புராதனமானது என்பதற்கு ஏராள் வகை நாணயச் சான்றுகள், அதன் இடைக்கால சரித்திரத்தின் எட்டாம் நூற்றாண்டு கல்வெட்டுக்கள் என்று பல விதமாக விஷயங்கள் கொண்டுள்ள இந்நூல், ஊர் வரலாறுகளுக்கு நல்ல ஓர் உதாரணம். (படங்களை இன்னும் கொஞ்சம் தெளிவாக ஸ்கேன் பண்ணியிருக்கலாம்.)

ஏவிஎம் ஜாபர்தீன் நூர்ஜஹான் ட்ரஸ்ட் சீறாப் புராணம் மூலமும் உரையும் விளக்கமுமாக, பகுதி பகுதியாக வெளியிட்டு வருகிறார்கள். எனக்குக் கிடைத்த இரண்டாம் பாகத்தில் அலிமா முலையூட்டுப் படலம், இலாஞ்சினை தரித்த படலம், புனல் விளையாட்டுப் படலம், புகைறா கண்ட படலம் என்று நான்கு படலங்கள் உள்ளன. சாதாரணமாக வரலாற்றாசிரியர்கள், நபிகளார் பட்டம் பெற்ற நாற்பதாம் வயதிலிருந்து அவர்கள் இறப்பெய்திய அறுபத்து மூன்றாம் ஆண்டு வரை தான் விவரமாக எழுதியிருக்கிறார்கள். உமறுப் புலவர், நபிகள் அவதாரத்திலிருந்தே துவங்கி குழந்தைப் பருவத்திலேயே இறையருள் பெற்றிலங்கியதை விரிவாகச் சொல்வது சீறாவின் சிறப்பு. வேறு எந்த மொழியிலும் உள்ளதோ தெரியவில்லை. சீறா காவிய நடையில் இருப்பதையும் படித்து மகிழ முடிகிறது.

நண்பர் ஞா. மாணிக்கவாசகன் அவர்கள் சிலப்பதிகாரம், குறள், சரசுவதி அந்தாதி, விவேக சிந்தாமணி, நாலடியார், ஆசாரக் கோவை போன்றவைகளுக்கு தெளிவுரைகள் வெளியிட்டுள்ளார் (உமா பதிப்பகம் ஐயப்ப செட்டி தெரு, மண்ணடி, சென்னை - 1). விவேக சிந்தாமணி யார் எப்போது எழுதியது என்பதெல்லாம் சரியாகத் தெரியாவிட்டாலும் அறிவுரைகளில் விவேகம் மிக எளிய உதாரணங்கள் மூலம் இருக்கிறது. செய்யுள்களின் எளிமையைப் பார்க்கும் போது மிகவும் காலத்தில் பிற்பட்ட நூல் என்பது தெளிவாகிறது. "பொன்னொரு மணியுண்டானால் புலைஞனும் கிளைஞன் என்று தன்னையும் புகழ்ந்து கொண்டு சாதியில் மணமும் செய்வார் மன்னராய் இருந்த பேர்கள் வகை கெட்டுப் போவாராகில் பின்னையும் யாரோ என்று பேசுவார் ஏசுவாரே" போன்ற பாடல்கள் உரை தேவையின்றியே புரிகின்றன.

ஆசாரக் கோவை வினோதமான நூல். அளக்கும் படியை மனை மீது வைக்கக் கூடாது. உட்காரும் மணையை தலைகீழாக கவிழ்த்து வைக்கக் கூடாது. புதிய ஆடையை தலைவாசலில் பரப்பக் கூடாது. கடை வாசலில் கட்டில் போட்டுப் படுக்கக் கூடாது போன்ற நாட்டுப்புற நம்பிக்கைகளைப் பட்டியலிடுவதுடன் நரகம் போக உத்தரவாதமான நான்கு வழிகளையும் சொல்கிறது (பொய், கோள் சொல்வது, திருட்டு, பொறாமை). கன்னடத்தில் மிக அதிகம் புழங்கும் த்ரிபதி என்னும் மூன்றடி செய்யுள் வகையை ஆசாரக் கோவையில் பார்க்கிறோம்.

டாக்டர் வ.செ. குழந்தைசாமிதான் குலோத்துங்கன் என்கிற பெயரில் மரபுக் கவிதைகள் எழுதுகிறார் என்பது தெரிந்த விஷயம். அவருடைய கவிதைகள் ஐந்தாவது தொகுப்பாக 'விதியே விதியே தமிழ்ச் சாதியே' என்கிற தலைப்பில் வருகிறது. பெரும்பாலும் அறுசீர் விருத்தம், ஆசிரியம், நொண்டிச் சிந்து வகைகளில் எளிய சந்தத்துடன் எழுதப்பட்ட கவிதைகள்.

"ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் எம் இனம்
அன்னை வளர்த்தது என்பீர் - சிறு
கோயிலின் பேர் சொல்லி எண்ணறு
மக்களைக்
கொன்று குவித்திடுவீர்."

என்று சரளமான சந்தத்துடன் கருத்துக்களைச் சொல்லவல்ல கவிஞர், சோகத்தின் உச்சியில், "ஆண்டுகள் ஆண்டுகளாய் தேடிடும் ஆய்வினில் யாதுணர்ந்தோம் ஈண்டுள வாழ்வறியோம் பின் விண்வெளியெங்கணும் ஏன் பறந்தோம்" என்னும் போது சிறக்கிறார்.

(மீண்டும் அடுத்த வாரம்)

# ஆகாயச் சிறகுகள்-10

"மூச்சந்தியிலே வந்து உக்காந்து போரா டுற அளவுக்கு, பொம்பளைகளுக்குத் தைரியம் வந்துருச்சா? குடும்பம் உருப்பட்டாப்புலே தான்."

அரிவாள் வெட்டு மாதிரி நெஞ்சுக்குள் வந்து விழுந்த வார்த்தைகள். முக்குரோட்டில் நின்ற ஏதோ ஒரு ஆம்பளையின் கரகரத்த குரல். வெட்டுப்பட்ட தலையாகக் குனிந்து... பயத்தில் பிராணனே மூச்சுத் திணற, நிமிர்ந்து பார்க்காமல் பிரேதமாய் வந்த பிரேமா.

யாரையும் ஏறிட்டுப் பார்க்கவில்லை. பார்க் கிற தெம்பில்லை. நடுங்கிச் சாகிற மனசு. 'எதிர்காலமும் நம்ம வாழ்க்கையுமே ஒங்கை யிலேதான்' என்று பெரியபாறையை உருட்டித் தலையில் போட்டு விட்டுப் போய் விட்ட பால்ச்சாமி.

பந்தலுக்குள் போனாள். "வாம்மா"... "பால்ச்சாமி சம்சாரம்தானே?" என்ற கேள்வி களின் முகங்களையெல்லாம் பார்க்கவில்லை. நிமிரவில்லை. வெட்டித் தொங்கிய குலையாக முகம்.

கிடைத்த இடத்தில் உட்கார்ந்தாள். சுற்றும் முற்றும் பார்க்கவில்லை. ஏறிட்டுப் பார்க்க வில்லை. குத்துக்கால் வைத்து, அதன் மேல் மடித்துப் போட்ட கைகளுக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

"என்னம்மா... ஏது செய்யுது?" "ஒடம்புக்குச் சொகம் இல்லியா? பால்ச்சாமி எங்க போயிருக் காரு? ஏம்மா நிமுந்து பாக்க மாட்டேங்க?"

பரிவும் பதற்றமுமாய் நச்சரிக்கிற பெண் கேள்விகள். எதற்கும் 'உம்'கூட கொட்ட வில்லை, பிரேமா. நாசிக்குள்ளிருந்து வருகிற வெப்ப ஆவி, கையில் சுடுகிறது. மனசின் வெக் கையை உணர்கிற பிரக்ஞையில்லை, அவ ளுக்கு.

வருகிறவர்களெல்லாம் முகம் தெரியாமல் உட்கார்ந்திருக்கிற இவளை "யாரு, யாரு?" - விசாரிக்கிறார்கள். "பால்ச்சாமி சம்சாரம்" என் கிற கிசுகிசுப்பான பதில்.

"ஏன் இப்படி இருக்கா?"

"தெரியலே!"

"ஒடம்புக்குச் சொகமில்லியா?"

"என்னென்னு தெரியலே. கேட்டா... ஒண் ணும் சொல்ல மாட்டேங்குது. பயப்படுது போலிருக்கு."

அவளைச் சுற்றிலும் அவளைப் பற்றிய பேச்சு. அன்பும் அக்கறையுமான விசாரிப்புகள். அவளுக்குக் கேட்கத்தான் செய்கிறது. தேக மெல்லாம் தீயாய்ப் பற்றியெரிகிறது. நாவெல் லாம் கசந்து அழுறுகிறது.

காய்ச்சல் கண்டவளைப் போல நடுங்கு கிறாள். சிலீர் சிலீரென்று புல்லரிக்கிறது. கூதல டிக்கிறது. போர்வையால் இறுக மூடிப் படுக் கணும் போல ஓர் உணர்வு.

கெட்ட கெட்ட கனவாக வருகிறது. கட்சித் தலைவரும், தங்கம்மாவும் அரிவாளைக் கையில் கொடுத்து "வெட்டு, வெட்டு, விடாதே" என்று பால்ச்சாமியை ஏவுகின்ற மாதிரி... ஓடுகிற இவளை விரட்டி, முடி யைப் பற்றி கீழே போட்டு, வயிற்றில் கால் வைத்து மிதித்துக் கொண்டு.

ஓங்கிய கை மாறாமல் 'சதக்' கென்று வெட்டுகிற மாதிரி... வழிகிற ரத்தத் தைத் தங்கம்மாவும், தலைவரும் அள்ளி அள் ளிக் குடிக்கிற மாதிரி... அவர்கள் முகமெல்லாம் இழுவிய ரத்தப் பிசுக்கு.

உண்ணாவிரதத்தை வாழ்த்திப் பேசுகிற ஆண் குரல்கள். பெண்களை ஒடுக்கி, உணர்வு களைச் சிதைத்து மகிழ்கிற ஆணாதிக்கக் குரூ ரம் பற்றி... பெண்ணை சக மனுசியாக மதிக்கா மல், வெறும் போகப் பண்டமாக நினைக்க வைக்கிற சினிமாக் கலாச்சாரம் பற்றி... பொது வாழ்வுக்கு வருகிற படித்த பெண்களின் ஆத் மாவை அதிரவைக்கிற வக்கிரச் செயல்களைப் பற்றி... காவல் நிலையங்களில் பாலியல் பலாத் காரம் மிகச் சாதாரண விஷயமாகி விட்ட பயங்கரம் பற்றியெல்லாம் பேசுகிற ஆண் குரல்கள்.

தங்கம்மாவும் பேசுகிறார். ஆஸ்த்மாவினால் இரைக்கிற குரல். வெறும் காற்றாய் வருகிற தொண்டைக் கிசுகிசுப்பு... சிரமப்பட்டு - ஆனால் உணர்ச்சிகரமாகப் பேசுகிற முதுமை யின் குரல்.

சிதம்பரம் பத்மினிக்கு நேர்ந்த பயங்கரம் பற்றி விளக்குகிறார். வாச்சாத்தி கிராமப் பெண

களுக்கு இழைக்கப்பட்ட காட்டுமிராண்டித்தனம் பற்றி... ராமேஸ்வரம் மீனவப் பெண்கள் நடத்தப்பட்ட கொடூர விதம் பற்றியெல்லாம் காட்சிப்படுத்திப் பேசுகிறார்...

பிரேமாவுக்குள் ஏற்கெனவே கிடந்த இருட்டு. இப்போது செவியும் அடைத்த மாதிரி... எதுவும் கேட்காமல்... சூழலை உணர முடியாமல்... கிறுகிறுப்பும் தலைசுற்றலுமாக... தானே வட்டச் சுழற்சியாக சுழற்றப்படுகிற மாதிரி...

குத்துக்கால் வைத்து, அதன் மீது மடித்துப் போட்ட கைகளில் முகம் புதைத்து உட்கார்ந்திருந்த பிரேமா... அப்படியே வலதுபுறமாகச் சரிந்து விட்டாள். மயங்கி விழுந்த அவளைச் சுற்றிலும் பதற்றமும் பதைப்புமாகப் பெண்கள்.

## மேலாண்மை பொன்னுச்சாமி

அவள் விழித்துப் பார்க்கிற போது, திங்கட் கிழமையாகி விட்டது.

"பிரேமா... ஏய்... பிரேமா..." கலங்கிக் குழைகிற பால்சாமியின் குரல். அழுகிறவனைப் போல பிசிறடிக்கிற குரல். ஈரப் பசையற்றுக் காய்ந்து போன நாவிலிருந்து எழுகிற குரல். கண்களைத் திறக்க முயன்றாள். 'ஐயோ, பாவம்' என்று கருணையால் விம்முகிற அவன் மனம். தனது ஆத்மாவின் தவிப்பாக அவன் குரலை உணர்ந்து துடிக்கிற பிரேமா. கண்ணைத் திறந்து அவனுக்கு ஆறுதல் அளிக்கத் தவிக்கிற மனம். "பதறாதீக. நா நல்லாத் தானிருக்கேன்" என்று உணர்த்த விழைகிற நெஞ்சு.

இமைகளைப் பிரிக்க முடியவில்லை. கண்ணுக்குள் மணல் விழுந்த மாதிரி நெறுநெறுக்கிறது. அழுத்தலான வலி. சிரமப்பட்டு யத்தனிக்கிறாள். மெள்ள மெள்ளப் போராடி இமைகளைத் திறந்தாள்.

கட்டிலின் விளிம்பில் அவன். அவள் முகத்தையே கூர்ந்து பார்க்கிற பால்சாமி. படபடக்கிற கண்கள். பதற்றத்திலும் கலக்கத்திலும் இறுகிக் கறுத்துக் கிடக்கிற முகம். ரெண்டு நாளாய் பல்லில் பச்சைத் தண்ணீர் படவில்லை போலும். உலர்ந்து



"சினிமாவுக்கும் அரசியலுக்கும் தொடர்பு இருக்கலாம்... அதுக்காக இப்படியா?"

"ஏன் என்ன ஆச்சு?"

"குழந்தை நட்சத்திரமாக முதல் முதல் நடிக்கும் பேபி சுமதியை அறிமுகம் செய்யும் போது... நாளைய முதல்வரை இப்படத்தில் பெருமையுடன் அறிமுகம் செய்கிறோம்னு விளம்பரம் செய்யறாங்க!"

"நடிகரை தேர்தல் பிரசாரத்துக்குக் கூப்பிட்டது தப்பாப் போச்சுங்க."

"ஏன் என்ன ஆச்சு?"

"ஸ்டார்ட்... கேமரா... ரெடி... ஷாட்... டேக் எல்லாம் சொன்னாத்தான் பேச ஆரம்பிக்கிறார்..."

– திருத்துறைப்பூண்டி எஸ். கந்தசாமி

"சரோ வீட்டு நாயோட வாலைக் காணுமே, என்ன ஆச்சு?"

"அது அவ மாமியாரைப் பார்த்து அடிக்கடி சந்தோஷமா வாலை ஆட்டறது அவளுக்குப் பிடிக்கலையாம்!"

– லலிதா செல்லப்பா

போய் வெடித்துக் கிடக்கிற உதடுகள்.

"பிரேமா... பிரேமா..." தவிப்பும் கலக்கமுமாய் அவன்.

பார்வையிலேயே ஆறுதல் சொல்கிற அவளது கண்கள். உதட்டைப் பிரிக்க முயன்றாள். மெல்லச் சிரிக்க முயன்றாள். பேச விரும்பினாள். தொண்டைக்குள் வறட்சி. பேச இயலாமல் திண்டாட்டம். நாக்கில் கசப்பு. உலர்ந்து போன வறட்சி. தொண்டைக்குள் ஜீவனாகப் பேசினாள்.

"எப்ப வந்தீக?"

"அன்னிக்கே வந்துட்டேன். சனிக்கிழமை நைட்லே."

"அன்னிக்கே...ன்னா? இன்னைக்கு என்ன கெழமை?"

"திங்கக்கெழமை"

"மூணு நாளாவா கெறங்கிக் கெடந்தேன்?"

"ஊம். நா ரொம்பப் பதறிட்டேன் பிரேமா."

"நீங்க சாப்டீகளா?"

உண்டு இல்லை என்று ரெண்டு பாவனைகளிலும் குழப்பமாய்த் தலையாட்டினான்.

"ரெண்டு நாளா ஒறங்கவேயில்லியா? கண்ணெல்லாம் செவந்து போய்க் கெடக்கு?"

"ஒறக்கமா? உசுரைக் கண்ணுலே வைச்சு உக்காந்துக்கிட்டிருக்கேன். டாக்டரு ரெண்டு மூணு தடவை வந்தாரு. ஊசி போட்டாரு. ரொம்பத் தைரியம் சொன்னாரு. அப்பவும் பயமாயிருந்துச்சு...".

"டாக்டரு வந்தாரா? நம்ம வீட்டுக்கா?"

"ம்."

டாக்டர் ரொம்பக் கண்டிப்பு. கிளினிக் வந்தவர்களுக்குத்தான் வைத்தியம். எவ்வளவு பெரிய கோடீஸ்வரனாக இருந்தாலும், வீட்டுக்குப் போய் வைத்தியம் பார்க்கிற பழக்கமில்லை.

"எப்படி வந்தாரு?"

"எல்லாம்... தங்கம்மா ஏற்பாடு."

தங்கம்மா என்றதும் சட்டென்று கறுத்துப் போன அவள் முகம். இறுகிப் போன உதடுகள். வெறுப்பின் அயற்சியில் மீண்டும் கண்ணை மூடிக் கொண்டாள். மனசில் படபடபடப்பு. நினைவெல்லாம் கசப்பு. பால்ச்சாமி என்ற ஆயுதத்தைக் கையாண்டவள். அம்பை எய்தவள். இவள் நெஞ்சைப் பிளந்து, தரையில் வீழ்த்தி துடிதுடிக்க வைத்த அம்பு. நஞ்சாக்கப்பட்ட அம்பு.

"பிரேமா... பிரேமா... பிரேமா..."

ஆத்மாவின் குரல். அன்பின் துடிப்பு. பாசப் பதைப்பான பால்ச்சாமி. உறக்கமுமில்லாமல் உணவுமில்லாமல் மூன்று நாளாய் தவியாய் தவித்து, மனஉளைச்சலில் மல்லாடுகிற தனது ஆத்மா. கருணையில் இளகிப் போகிற அவள் மனக் குழைவு.

நீர்க்கசிவோடு கண்களைத் திறந்தாள்.

"என்னம்மா.... செய்யுது?"

"ஒண்ணுமில்லே. நல்லாத்தானிருக்கேன்."

"பெறகு ஏன்... கண்ணை மூடுனே? தெறக்க முடியலியா?"

"முடியுது."

"ஆயாசமா வருதா? சோர்ந்து போய் வருதா?"

"இப்பப் பரவால்லே. தெம்பாயிருக்கு."

"எனக்கு இப்பத்தான் உசுரே வருது, பிரேமா."

அவள் தன் வலது கையைக் கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்து பதைக்கும் பால்ச்சாமியின் தொடையில் வைத்தாள். மெல்லத் தட்டிக் கொடுத்தாள், அழுது சிணுங்கும் பிள்ளையை ஆறுதல்படுத்தும் தாயைப் போல.

"எதுக்குப் பதறுதீக? எனக்கு என்ன செய்ஞ்சிரும்? அம்புட்டுப் பாசத்தோட இருக்குற வீட்டுக்காரரை விட்டுட்டுப் போக,



KANMANI
AGRO
GOLD
FARM

ஸ்ரீ அன்னையே துணை

# KANMANI AGRO GOLD FARM

9,10 TH AVENUE, ASHOK NAGAR, MADRAS - 600 083. TEL: 482 43 79

**[A KANMANI GROUP OF COMPANY]**

CATERING CASH CROP CULTIVATION
LIKE VEGETABLES, FRUITS & FLOWERS

## ACCEPTS FIXED DEPOSITS

*STRICTLY UNDER 45 S. CHAPTER III C OF RBI ACT OF 1934*

| PERIOD | 1 YEAR | 2 YEARS | 3 YEARS |
|---|---|---|---|
| INTEREST PAID QUARTERLY | @ 24% P.A. | 24% P.A. | 24% P.A. |
| INCENTIVE PAID INITIALLY | 3% | 6% | 9% |
| SPL. INCENTIVE FOR DEPOSITORS OF RS. 10,000/- AND ABOVE | - | - | 3% |

*Plus Attractive Gifts for all Depositors.*

Mediamate/KA/MS/96



"இந்த நாளர் ஸ்கூல் முதல்வரு ஒளிவுமறைவு இல்லாதவரு."

"அதுக்காக அட்மிஷன் டயத்துல இப்படியா கொள்ளைக்காரன் வேஷத்துல ஸ்கூலுக்கு வர்றது?"

— பி.ஜி.பி. இசக்கி



"அந்த எம்.பி. ஏன் பார்லிமெண்ட்டுக்கு வெளியே நின்று சத்தம் போடுறாரு?"

"கட்சித் தலைவர் வெளியே இருந்து ஆதரவு தருவோம்னு சொன்னதை தப்பிதமா புரிஞ்சிக்கிட்டாராம்."



"சந்தனக் கடத்தல் வீரப்பனுக்கு 'பொது மன்னிப்பு' கிடைச்சப்புறம் என்னப்பா நடக்கும்....!?"

"பெரிசா என்ன நடந்துடப் போவுது... 'பாண்டிட் கிங்'ங்கிற தலைப்பிலே படம் ரிலீஸாகும்... அப்புறமா தேர்தல்லே போட்டியிட்டு 'எம்.பி.' ஆயிடுவான்...!"

— கே.ஜி.எஸ். கோவிந்தன்

எந்தப் பொட்டச்சியாலே ஏலும்?"

அவளது கண்ணில் நீர்க்கசிவு. உலர்ந்த உதடுகளின் உயிரொளியாய் ஒரு புன்னகைக் கீற்று. கன்னக் கதுப்புகளில் கண் விழிக்கும் ஒரு மினுமினுப்பு. மடியில் வைத்த அவள் கையில் இவன் கைவைத்து வருடுகிறான். அவளுக்குள் ஏதோ அதிர்வு. உயிரின் சிலிர்ப்பாக அவனது ஆத்ம ஸ்பரிசம்.

'பிரேமா மயங்கிச் சரிந்து விட்டாள்' என்ற தகவல் கேள்விப்பட்டு, மனம் கேளாமல் ஓடி வந்த பிரேமாவின் அம்மா. பதறிப் பதறிப் புலம்பிய அவள். ஆறுதல் சொல்லி தைர்யம் சொன்ன இவன்.

"அவ... எந்திக்கிற வரைக்கும், நா இருந்து அடுப்பு வேலையைப் பாக்குறேன்யா..."

"வேண்டாம் அத்தே. நல்லதோ கெட்டதோ நாங்க பாத்துக்கிடுதோம். யாரும் ஒத்தாசைக்கு வர வேண்டாம்."

"ஏய்யா... இது ஒங்களுக்கே நல்லாயிருக்கா? வீட்டைத் தவிர, வெளியே கால் எடுத்து வைக்கப் பழக்கமில்லே, எங்க புள்ளைக்கு? அதைப் போய்... முச்சந்தியிலே போய் உக்கார வைச்சு, பாடாய்ப்படுத்தியிருக்கீகளே... இது நியாயமா?"

அழுகையும் புலம்பலுமாய்... அத்தை. இது, கெஞ்சலா, கண்டிப்பா, கோபமா? இனம்பிரிக்க முடியாத தொனி. பால்ச்சாமிக்கு எரிச்சலாக வந்தது.

"நீங்க உங்க ஜோலியைப் பாத்துட்டுப் போங்க. எம் பொண்டாட்டியை எப்படிப் பாத்துக்கிடணும்னு எனக்குத் தெரியும்."

சள்ளென்று விழுந்தான்.

இவளது அம்மாவும் அய்யாவும் இழவு கேட்க வந்தவர்களைப் போல ஓடி வந்தனர். அலையக் குலைய. அடித்து விரட்டாத குறையாகத் துரத்தி விட்டான்...

எல்லாவற்றையும் விலாவாரியாக விளக்கிச் சொன்னான். அவள் முகம் மட்டும் 'உம்' கொட்டுகிற பாவனையில் அசைந்து கொண்டிருந்தது. அவள் முகத்தில் பெருமிதக் களை. கண்களில் மகிழ்ச்சி மின்னல். சில கணங்களில் நீர்த்துளி.

அவள் பரவசப்பட்டுப் போயிருந்தாள், உள்ளுக்குள். தன் மீது எத்தனை வாஞ்சை, இந்த மனிதருக்கு! செக்கச் செவேலென்று சீமை ராசா போலிருக்கும் இந்த ஆளுக்கு, இந்தக் 'கருவாய்ச்சி' மேல் இம்புட்டுப் பிரியமா? நகை நட்டு இல்லாமல் வெறும் கழுதையாக வீட்டுக்குள் வந்தவளுக்கு இம்புட்டு மரியாதையா? இதுக்கு நா தகுதியா? இம்புட்டுப் பிரியமா இருக்குறதுக்கு என்ன காரணம்? ஏது காரணம்?

கட்சித் தோழர்கள் வந்து பார்த்து விட்டுப் போனதை விளக்கிச் சொன்ன போது, டாக்டர் வந்தார்.

"என்ன காம்ரேட்..." என்ற கிண்டலும் ஜாலியுமான குரல்.

"சார்... வாங்க."

"என்ன... இன்னும் படுத்துருக்காங்க? சரியாயிருச்சே. இப்ப அவங்க கையாலே காப்பி சாப்பிட்டுட்டுப் போகலாம்னு வந்தேன்."

"இப்பத்தான்... கண்ணே முழிச்சுப் பாத்தா... சார்..."

"நீங்க ஏன் இப்படிப் பயப்படுறீக? உங்க ஒய்ஃப், இப்ப பெர்ஃபெக்டா இருக்காங்க. நோ ப்ராப்ளம். டென்ஷன், அலர்ஜியாலே வந்த காய்ச்சல். சரியாயிருச்சு. நா வாரேன்..."

"ரொம்ப நன்றி... சார்."

"தங்கம்மாதான் என்னைப் பாடாய்ப்படுத்திட்டாங்க. தாங்க முடியாத நச்சரிப்பு. தாங்க்ஸை அவங்களுக்குச் சொல்லுங்க. பிரேமா, சாயங்காலம் உங்க சமையலை பால்ச்சாமி சாப்பிடலாம்."

(தொடரும்)




1996 ஜூன் 16
தாது ஆனி 2
மலர் : 54
இதழ் : 46


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பிறந்தநாள் கொ(தி)ண்டாட்டங்கள்!

முதல் சட்டமன்றக் கூட்டத் தொடர் ஆரோக்கியமான விவாதங்களுடன் நடந்து முடிந்திருக்கிறது. ஐந்தாண்டு காலமாக அடைத்து வைத்திருந்த ஜன்னல்களைத் திறந்து ஜனநாயக காற்று மீண்டும் தமிழகத்துக்குள் நுழைய வழி செய்திருக்கிறது புதிய அரசு.

முதல் சட்டமன்றக் கூட்டத் தொடரின் பின்னோடேயே வந்த மொடக்குறிச்சி தேர்தல் வெற்றியை, முதல்வருக்கு அளித்த பிறந்தநாள் பரிசு என்று குறிப்பிட்டிருக்கிறார் சுப்புலட்சுமி ஜகதீசன். நாமும் வாழ்த்துவோம்.

தேர்தல் வெற்றிகளைப் போல் அரசு நிர்வாகத்திலும் வெற்றிகள் சேர வேண்டும் என்பது தான் தமிழக மக்களின் ஒருமித்த எதிர்பார்ப்பு. இந்த எதிர்பார்ப்பின் பிரும்மாண்ட பரிமாணங்களை முதல்வர் துல்லியமாக உணர வேண்டும். அவ்வாறு உணர்வாரேயானால், இன்று தமிழ்நாட்டில் ஆங்காங்கே எரியும் அபாய எச்சரிக்கை விளக்குகள் அணைய உடனடியாகச் செயல்படுவார்.

தியானேஸ்வரன், சசிகலா ஆகியோர் சட்டத்தின் சந்து பொந்துகளில் நுழைந்து தப்ப முயன்று வருகிறார்கள். இதற்குத் தமிழக அரசைப் பொறுப்பாக்க முடியாதுதான். எனினும் சி.பி.ஐ., அமுலாக்கப் பிரிவு போன்றவற்றுடன் தமிழக காவல்துறை ஒத்துழைத்து, கடமைகளை




முழுமூச்சுடன் ஆற்றாவிட்டால் அது தமிழகத்தின் புதிய ஆட்சிக்கும் சேர்த்தே அவப் பெயரை உண்டாக்கும்.

சட்டம் ஒழுங்கு விஷயத்திலும் தமிழகத்தில் கவலைப்படும்படியான நிலை ஏற்பட்டிருக்கிறது. சென்னையின் நெரிசலான குடியிருப்புப் பகுதியில் சர்வசாதாரணமாக நாட்டு வெடிகுண்டு வெடித்திருக்கிறது. வீடுபுகுந்து நடத்தப்படும் கொள்ளைகள் தொடர்கின்றன. சிந்தாதரிப் பேட்டை கடைக்காரர்களைக் கட்டாயப்படுத்திப் பணம் பிடுங்கியிருக்கிறார்கள் குண்டர்கள். காவல் துறையினரின் சம்பளப்பட்டுவாடாவுக்காக ஒரு போலீஸ் அதிகாரி எடுத்துப் போன பணமே களவாடப்பட்டிருக்கிறது! மதுரை கோயிலில் குண்டு வெடிப்பு, கலவரங்களில் இருமுறை துப்பாக்கிச் சூடு என்று, குறுகிய காலத்தில் ஆளுங் கட்சிக்கு அவப்பெயரும் எதிர்க்கட்சிக்கு அவலுமாக அமையக்கூடிய நிகழ்ச்சிகள் நடந்து விட்டன.

இதெல்லாம் போதாதென்று ஒரு படகு நிறைய இலங்கைத் தமிழர்கள் நாகப்பட்டினம் கடற்கரை அருகே வந்து இறங்கியிருக்கிறார்கள். ஃபைபர் கிளாஸ் படகில் வந்த இவர்கள் தங்களை 'அகதிகள்' என்று சொல்லிக் கொள்கிறார்கள். விடுதலைப் புலிகளோ, இந்தியாவிலும் தமிழகத்திலும் நேர்ந்துள்ள ஆட்சி மாற்றத்தால், ஈழப் பிரச்னை தொடர்பான கொள்கைகள் தங்களுக்குச் சாதகமாக மாற வேண்டும் என்று அறிக்கை விட்டிருக்கிறார்கள்!

இதையெல்லாம் சமாளிப்பதற்கு முன், முதல்வர் தமது அமைச்சரவை சகாக்களைக் கவனித்துக் கட்டுப்படுத்த வேண்டியவராயிருக்கிறார். துரைமுருகன், தமிழ்க்குடிமகன் போன்றோர் தங்கள் செயலாலும் சொல்லாலும் முதல்வருக்கு தர்மசங்கடம் விளைவித்து வருகிறார்கள். இவர்களது சுதந்தரத்தைக் கட்டுப்படுத்துவது போலன்றி, நாசூக்காக எச்சரித்து நல்வழிப்படுத்த வேண்டிய சுமை முதல்வருக்கு இருக்கிறது.

சட்டம் ஒழுங்குப் பிரச்னையைப் பொறுத்தவரை, உளவுத் துறையுடன் அடிக்கடி



கலந்தாலோசித்து, முடிவுகளெடுக்க வேண்டியது முதல்வரின் பொறுப்பு. சின்ன சிக்கல்களைப் பெரிய கலவரங்களாக வளர விடாமல், முளையிலேயே களைய வேண்டுமானால் உளவுத் துறைதான் மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

தமிழீழ அமைப்புகளின் தலைவர்கள் பலர், புதிய தமிழக முதல்வருடன் பேச விரும்புவதாகத் தெரிவித்திருக்கிறார்கள். அந்த பேச்சு வார்த்தைகளின்போது, ஈழத் தமிழ் மக்களிடம் தமக்கு அனுதாபம் உள்ள போதிலும், பிரிவினைக்கோ, வன்முறைக்கோ தாம் எள்முனையளவும் ஆதரவு தரமுடியாது என்று முதல்வர் கண்டிப்புடன் தெரிவிக்க வேண்டும். ஜனநாயகப் பாதைக்கும் பேச்சு வார்த்தைக்கும் மட்டுமே ஆதரவு வழங்கப்படும் என்று உணர்த்த வேண்டும்.

தேவே கௌடா பிரதமராகியிருப்பதால் காவிரி பிரச்னைக்குத் தீர்வு காண்பது முன்னெப்போதையும் விட சுலபமாய் இருக்கும் என்று மத்திய அமைச்சர் குஜ்ரால் கூறியிருக்கிறார். தஞ்சை விவசாய மக்களின் எதிர்பார்ப்பும் முன்னெப்போதைக் காட்டிலும் அதிகமாக உள்ளது. கர்நாடகாவைச் சேர்ந்த ஒரு பிரதமர் ஆட்சி புரிவதால் மட்டுமே கர்நாடக அரசு தமிழ்நாட்டுக்குக் காவிரித் தண்ணீரைச் சட்டப்படி மனமுவந்து வழங்கிவிடும் என்று எதிர்பார்க்க முடியாது. 'நான் அடிக்கிற மாதிரி அடிக்கிறேன்; நீ அழுகிற மாதிரி அழு' என்ற நாடகம் வெகு சுலபமாக அரங்கேறிவிடக்கூடும். எனவே முதல்வர் அதிக காலம் தாமதிக்காமல் விழிப்புடனிருந்து விவசாயிகளுக்குக் காவிரி நீரைப் பெற்றுத்தர முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும்.

தம் பிறந்தநாள் கொண்டாட்டங்களில் ஆடம்பரம் தவிர்த்து, பொது மக்களின் நல்லெண்ணத்தைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார் முதல்வர்.

அந்த நல்லெண்ணம் நீடித்து நிலைக்கவும் வேண்டுமானால், மேற்படி விஷயங்களில் அவர் உடனடியாக கவனமுடன் செயல்பட ஆரம்பிக்க வேண்டும்.

திருமணமாகி முதல் ஆண்டு நிறைவை அப்போதுதான் கொண்டாடி முடித்திருந்தார், முன்னணி கர்நாடக இசைப் பாடகி சௌம்யா. ஒரு சராசரி பெண்ணின் சின்னச் சின்ன சந்தோஷங் களையெல்லாம் எதிர்பார்க்கவோ, அனு பவிக்கவோ நேரமில்லாத ஜெட் வேக வாழ்க்கை. ''கடந்த ஒரு வருடத்தில் என் கணவரும் நானும் ஆறு மாதங்கள்தான் சேர்ந்து இருந்திருப்போம்...'' என்றார். கொச் சின் பயணத்துக்கும் குமாரபாளையம் கச்சேரிக்கும் இடையில் அவருக்குக் கிடைத்த ஓர் அபூர்வ ஓய்வு நாளில் சந்தித்தபோது, இசையில் மட்டுமின்றி, நடிப்பிலும் தமக்கிருக்கும் ஆர்வத்தை வெளிப்படையாகப் பேசினார்...



# சௌம்யா: 'ஓ.கே.' ஆன

**''ஒரு முன்னணிப் பாடகியாக இருப் பதில் ரொம்ப கஷ்டமான அம்சம் என்ன என்று நினைக்கிறீர்கள்?''**

''நேரமின்மையைத்தான் ஒரு பெரிய பிரச்னையாகச் சொல்லுவேன். அதுவும் திருமணம் ஆன பிறகு பொறுப்புகள் அதிகரித்து விட்டன. சில சமயம் பாட்டுக் கேட்டுக் கொண்டே சமைக் கிறேன். கணவர் ஸ்ரீதர் அற்புத மான மனிதர்தான். ஆனாலும் நம் சமுதாய அமைப்பு பெண்களிடம் தான் அதிகமாக எதிர்பார்க்கிறது என்பதால் கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருக் கிறது... குடும்ப விஷயங்களைக் கூட சமாளித்து விடலாம். 'கச்சேரி கச்சேரி' என்று பறப்பதால் நின்று யோசிக்க நேரமில்லாமல் போய் விடுகிறது. ஒரு கலைஞர் இசையைப் பற்றி நிறைய யோசித்துக் கொண்டே இருக்கணும். அது முடியாமல் போகிறதே என்ற கவலை இப்போது இருக்கிறது. தவிர, நம் இசைக்காக நாம் ஏதாவது செய்யணுமே, என்ன செய்யப் போகிறோம் என்கிற சிந்தனையும் எழுந்து கொண்டேயிருக்கிறது.''

**''உங்கள் கணவருக்கு இசையில் ஈடுபாடு இல்லையா...?''**

''நான் கேட்கும் எல்லாவிதமான இசையை யும் அவரும் ரசித்துக் கேட்பார். எப்போதா வது என் கச்சேரிகளுக்கு வருவார். கர்நாடக இசைக் கலைஞர்களை மிகவும் மரியா தைக்குரியவர்களாகக் கருதுகிறார். ஆனால் விஷயம் புரிந்து விமர்சிக்கும் அளவுக்கு அவருக்கு நுட்பமெல்லாம் தெரியாது... ரொம் பவும் நுட்பம் தெரிந்து விமர்சிக்கக் கூடிய வராகவோ, இன்னொரு கலைஞராகவோ இருந்தால் கணவன் - மனைவியிடையே 'ego' பிரச்னை நிச்சயமாய் வரும் என்பது என் கருத்து. அதனால், இசையில் அதிக ஈடுபாடு இல்லாத ஒருத்தரைத்தான் நான் மணக்க விரும்பினேன். நான் விரும்பியபடியே அமைந்தது.''

**''பாடகராய் இருப்பதில் கஷ்டம் இருப்பது போல் அனுகூலமும் இருக்கும் இல்லையா...?''**

(யோசிக்கிறார்...) ''இருக்கிறது... நிறைய பேரைத் தெரிந்து கொள்ள முடிகிறது. அதன் மூலம் நம் கலை, ஆற்றல் வளர்கிறது.''

**''அப்படிச் சமீபத்தில் தெரிந்து கொண்ட ஒருவரைப் பற்றிச் சொல்லுங்களேன்...''**

''மஹாராஜா சுவாதி திருநாள் பரம்பரை யினரான அசுவதி திருநாள் ராம வர்மா அவர்களைக் குறிப்பிடலாம். இசை பற்றிப் பல அபூர்வமான விஷயங்களை அவரிடம் தெரிந்து கொண்டேன். மேற்கத்திய சாஸ்த்ரீய

இசையை நிறையக் கேட்கச் சொல்லி அறி முகப்படுத்தினார்...''

***''மிகச் சிறிய வயதிலேயே உங்கள் இசைத் திறன் வெளிப்பட்டது என்றும் அதை வளர்க்க விரும்பி டாக்டர் எஸ். ராம நாதன் தாமே முன்வந்து உங்களை சிஷ்யை யாக்கிக் கொண்டார் என்றும் கேள்விப் பட்டிருக்கிறோம்...''***

''ஆமாம். அப்போது நாங்கள் கேரளாவில் இருந்தோம். என் அப்பாவுக்கு சங்கீதத்தில் ரொம்ப ஈடுபாடு உண்டு என்பதால் எல்லா கலைஞர்களையும் தெரியும். ஒருமுறை தாத்தா (டாக்டர் எஸ். ராமநாதன்) அங்கு வந்தபோது ''இந்தக் குழந்தையை என்னுடன் அனுப்பி விடு...'' என்றார். விடுமுறை நாட்களிலெல்லாம் என்னை சென்னைக்கு ரயிலேற்றி அனுப்பி விடுவார்கள். தாத்தா வீட்டிலேயே அவர் குடும்பத்தில் ஒருவராகத் தங்கிப் பாட்டுக் கற்றுக் கொண்டேன். அவர் போகும் இடத்துக்கெல்லாம் போய், இசை மாணவர்களுக்கு அவர் நடத்திய வகுப்புகளில் அமர்ந்து, லெக்சர் - டெமான்ஸ்ட்ரேஷன் கேட்டு... வளர்ந்தேன். விடுமுறை முடிந்து பள்ளி திறக்கும் நாளில் ஊர் போய்ச் சேருவேன். சக மாணவர்கள் ஏதாவது டூர், எக்ஸ்கர்ஷன் என்று உல்லாசப் பயணம் போன நாட்களில் கூட அப்பா என்னை சென்னைக்கு அனுப்பி விடுவார்...''

# 'முதல் டேக்!'

***''ஏறத்தாழ ஒரு குருகுலவாசம்- நவீன குருகுலவாசம் செய்திருக்கிறீர்கள். உங்களிடம் குருகுலவாசம் செய்ய இன்றைக்கு யாராவது வந்தால்....!''***

''இந்த வருஷம்தான் ஒரு மாணவி வந்து சேர்ந்திருக்கிறாள். உடுப்பியிலிருந்து வந்து கோடை விடுமுறை முடிய இங்கு சென்னையில் இருந்தாள். இன்றைக்குத்தான் உடுப்பிக்குத் திரும்புகிறாள். அவள் பெயர் ரஞ்சனி. எட்டாம் வகுப்பு மாணவி. ரொம்ப திறமையுள்ள சிறுமி...''

***''ஐ.ஐ.டி.யில் விஞ்ஞானம் படித்து, டாக்டர் பட்டம் பெற்றிருக்கக்கூடிய நிலையில் அந்த முயற்சியைப் பாதியில் விட்டு விட்டீர்கள். இப்படி பாதி கிணறு தாண்டுவதற்காக ஒரு காரியத்தை எடுத்துக் கொள்ளலாமா...?''***

''I love science. எனக்கு சங்கீதம் எவ்வளவு பிடிக்குமோ அந்த அளவுக்கு விஞ்ஞானமும் பிடிக்கும். அந்த ஆசையினால் படித்தேன். Synthetic Organic Chemistry என்ற பிரிவைத் தேர்ந்தெடுத்தேன். எய்ட்ஸ் எதிர்ப்பு மருந்து உருவாக்கும் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தேன். அதை முடிக்க நான் இன்னும் ஐந்தாறு வருடங்கள் செலவிட்டிருக்க வேண்டும். அதற்குள் எனக்கு முப்பது வயது முடிந்து போயிருக்கும். அந்த வயதில் பாடகியாக என்னை நிலைப்படுத்திக் கொள்வது ரொம்ப கஷ்டம். இசைத் துறையில் இப்போது 25 - 30 வயதுக்குள் நிலைபெறுவது ரொம்ப அவசியமாக இருக்கிறது. அதனால்தான் படிப்பை விட்டேன். மேலும், படிக்கிற காலத்தில், கச்சேரியில் உட்காரும் போது மாலிக்யூல்கள் ஞாபகம் வர ஆரம்பித்தன!



நான் எடுத்துக் கொண்ட ஆராய்ச்சிக்குப் பரிசோதனைக் கூடத்தில் எக்கச்சக்கமான நேரம் செலவிட வேண்டியிருந்தது. அவ்வாறு இல்லாமல் தியரி சார்ந்த ஆராய்ச்சியாக மேற்கொண்டிருந்தால் அதை முழுமையாக முடித்திருப்பேன்..."

**"பெண் பாடகராக இருப்பது அனுகூலமாகத் தெரிகிறதா..."**

"இல்லை! மாறாக, போட்டி அதிகம் என்று நினைக்கிறேன்... சென்னை வாய்ப்புகளுக்கு நிச்சயமாகப் போட்டி அதிகமாகத்தான் இருக்கிறது. வெளியூர்களில் வேண்டுமானால் பெண் பாடகர்களுக்கு அதிக வாய்ப்புகள் கிடைக்கின்றன என்று சொல்லலாம்...."

**"சென்னையில் கூட, பெண் கலைஞர்களின் தோற்றமும் அழகும் கூட்டத்தை**

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

**"எதுஎதுக்குத்தான் 'பெட்'கட்டற துங்கற விவஸ்தை இல்லாமல் போயிடிச்சி..."**

**"எப்படி சொல்றே."**

**"மத்திய அரசு எத்தனை நாளில் கவிழும்னு பெட் வைக்கிறாங்க!"**

**–பிரியதர்சினி.**

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

**ஈர்க்கிறது என்பது உங்களுக்குத் தெரியுமா...?"**

"ஓரளவுக்கு அப்படி இருக்கலாம். ஆனால் ரசிகர்கள், ஆற்றலை விட தோற்றத்துக்கு மதிப்பு அதிகம் கொடுப்பது ஆரோக்கியமானதில்லையே..."

**"ஆரோக்கியமில்லைதான். ஆனால் பெண்களுக்கு அது அனுகூலமாக இருப்பதாகப் பரவலாகச் சொல்கிறார்கள்."**

"அதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். தர்க்கரீதியாக மட்டுமின்றி, நடைமுறையிலும் பார்த்தால், ஆண் பாடகர்கள் தங்கள் தோற்றத்தால் பெண் ரசிகர்களை ஈர்க்கிறார்கள்... இதைப் போன்ற கருத்துக்களும் கமென்டுகளும் கலைத்துறையில் எப்போதும் இருந்து கொண்டேதான் இருக்கும்..."

**"உங்களுக்கு சினிமாவில் நடிக்க வாய்ப்பு கிடைத்தது, இல்லையா...?"**

"ஆமாம். ராஜ்கிரணின் படம் ஒன்றில் நடிக்க அழைத்தார்கள். ரொம்பவும் வற்புறுத்தினார்கள். ஆனால் என் அப்பாவுக்கு விருப்பமில்லை. மறுத்து விட்டார்..."

**"உங்களுக்கு நடிக்க விருப்பம் இருப்பது போல் தெரிகிறதே..."**

"I have a passion for acting...."

**"எப்போது, எதில் நடித்தீர்கள்?"**

"முரளி நல்லப்பா டைரக்ட் செய்த 'ராக சுதா ரஸ' தொடரில் நடித்திருக்கிறேன். அதற்கு ஷூட்டிங் நடந்த போது என் 'முதல் டேக்'கே ஓ.கே. ஆகிவிட்டது. முன் அனுபவம் இல்லாத எனக்கு அது பெரிய விஷயமாகத்தான் தோன்றியது..."

**"இப்போது சினிமாவில் நடிக்க வாய்ப்பு வந்தால் ஏற்பீர்களா...?"**

"எனக்கு ஆட்சேபணையில்லை... ஆனால் சினிமாவினால் என் இமேஜ் பாதிக்கப்படும் என்ற பயம் இருக்கிறது. அப்புறம் மீண்டும் இந்த இசைத் துறையில் இதே அங்கீகாரத்துடன் தொடர முடியுமா...? அது பெரிய கேள்விக்குறி. நடிப்பும் ஒரு சிறந்த கலைதானே. ஆனால் அப்படி நினைக்க முடியாதபடி அர்த்தமற்ற பாடல் காட்சிகள், வலிப்பு வந்த மாதிரி நடனங்கள் என்று சினிமா துறை ஒரு பாதையில் போய்க் கொண்டிருக்கிறது. அந்த மாதிரி காட்சிகள் இல்லாமல், பொதுவாக ரேவதி நடிப்பது போன்ற நல்ல, கண்ணியமான பாத்திரங்கள் கிடைத்தால் ஏற்பது குறித்து யோசிக்கலாம்... அப்போதும் ரொம்ப யோசிப்பேன். என் தற்போதைய பெயருக்கு பாதிப்பு வரக்கூடாது... எங்கள் இசைத் துறையிலிருந்து சேஷகோபாலன், கணேஷ் – குமரேஷ் போன்றவர்கள் நடிக்கப் போனதை ரொம்பவும் பாராட்டத் தோன்றுகிறது. அவர்களுடைய முடிவு துணிச்சலானது.

**"ஒரு பக்கம் விஞ்ஞான ஆர்வம் இருக்கிறது. இன்னொரு பக்கம் கலைஞராகவும் இருக்கிறீர்கள்... இசையை விஞ்ஞானம் என்பீர்களா? கலை என்பீர்களா?"**

"விஞ்ஞானமாகக் கற்று கலையாக வெளிப்படுத்துவதுதான் இசை..."

**"எப்படி...?"**

"இசையில் நிறைய மீற முடியாத விதிகள் உண்டு; காரண – காரிய (cause and effect) அடிப்படை உண்டு; குரலின் அமைப்பும் செயல்பாடும், வாத்தியங்களின் வடிவமைப்பும் துல்லியமான விஞ்ஞானம். அதையெல்லாம் கற்றுக் கொண்டு கச்சிதப்படுத்தி, விதிக்கப்பட்ட கட்டுப்பாட்டுக்குள் அழகாக வெளிப்படுத்தும்போது விஞ்ஞானம் கலையாக மாற்றம் பெறுகிறது. கேட்பவருக்கு அதன் அழகு மட்டுமே அனுபவிக்கக் கிடைக்கிறது."

# சர்ச்சையில் சிக்கிய நடனமணி!

ஒடிசி நடனக் கலைஞரான பிரதிமாபேடி பெங்களூர் அருகே 'நிருத்யகிராம்' என்ற பெயரில் ஒரு கலைப் பள்ளியை நடத்தி வருகிறார். கடந்த ஏழாண்டுகளாய் நடந்து வரும் இந்தப் பள்ளிக்கு கர்நாடக அரசு பத்து ஏக்கர் நிலத்தை முப்பது வருடகால குத்தகைக்குக் கொடுத்திருக்கிறது. பிரதிமா பேடி, நிருத்ய கிராமில் நடைபெறும் கலைவிழாக்களில், உள்ளூர் (கன்னட) கலைஞர்களைப் புறக்கணிக்கிறார் என்று இப்போது சர்ச்சை ஒன்று கிளம்பியிருக்கிறது.



பிரதிமாவோ இதை மறுக்கிறார். "கர்நாடக அரசு நிலத்தைக் கொடுத்ததுடன் சரி, அதன்பின் எந்த வித உதவியையும் செய்ய மறுக்கிறது. ஆண்டுக்கு ஆறு லட்சம் நிதி உதவி கோரி நான் அனுப்பிய விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டன. காரணம் என்ன தெரியுமா? என் விண்ணப்பம் கன்னடத்தில் எழுதப்படவில்லையாம்! கன்னட மண்ணைச் சாராத நான் எப்படி கன்னடத்தில் எழுத முடியும்? குத்தகைக்காலம் முப்பதாண்டுகள் முடிந்ததும், இந்த பத்து ஏக்கர் கலை கிராமத்தில் எழுந்துள்ள கட்டடங்கள் உட்பட அனைத்தையும் கர்நாடக அரசே எடுத்துக் கொண்டுவிடும்!" என்கிறார்.

"பிரதிமாவின் பணி மகத்தானது. தேவையில்லாமல் அவரை வம்புக்கிழுக்கிறார்கள், கன்னட மொழித் தீவிர வாதிகள்!" என்கிறார் பிரபல நாடகாசிரியர்- நடிகர் கிரீஷ் கர்னாட்.

தகவல் : **மௌஷ்மி.**

---

**"உங்களுடைய பல வேலைகளுக்கிடையே தினமும் செய்திகள் படிக்க நேரம் கிடைக்குமா...? அரசியலில் ஆர்வம் உண்டா...?"**

"கட்டாயம் பேப்பர் படித்து விடுவேன். அரசியலில் பெரிய ஆர்வம் கிடையாது. ஆனால் பி.ஜே.பி. ஆட்சி நிலைக்காததில் கொஞ்சம் வருத்தம்தான்..."

**"உங்களைக் கலாசார துறை அமைச்சராக நியமித்தால் என்ன செய்வீர்கள்...?"**

"ஐய்யயோ! நான் ரொம்ப மோசமான நிர்வாகியாக இருப்பேனே..."

**"நிர்வாகத்தை விடுங்கள். கொள்கைகளை வகுக்கலாமே..."**

"அதைச் செய்யலாம். முக்கியமாக இன்றைக்கு உலகக் கலை அரங்கில் 'இந்திய இசை என்றாலே சிதார், சரோட் போன்ற ஹிந்துஸ்தானி கருவிகளும் ஹிந்துஸ்தானி இசையும் தான் அறியப்படுகின்றன..."

**"ஆனால் கர்நாடக இசைக் கலைஞர்களெல்லாம் மாறி மாறி உலகம் சுற்றி வந்து கொண்டிருக்கிறார்களே...?"**

"அயல்நாடுகளுக்குப் போகிறோமேயொழிய அங்கேயும் இந்தியர்கள் குறிப்பாகத் தென்னிந்தியர்கள் உள்ள பகுதிகளில் மட்டும் கச்சேரி பண்ணிவிட்டு வந்து விடுகிறோம். முக்கியமான சர்வதேச இசை விழாக்களிலெல்லாம் நம் கலைஞர்கள் பங்கேற்க வேண்டாமா...? அதனால், நான் கலாசாரத் துறை அமைச்சரானால், கர்நாடக இசையையும் உலக அரங்கில் இடம்பெறச் செய்ய வேண்டும் என்று அரசாங்க கலாசார அமைப்புகளுக்குக் கொள்கை நிர்ணயிப்பேன்..."

**"நீங்கள் அமைச்சராகாவிட்டாலும் அப்படியொரு நல்ல மாற்றம் வரட்டும்... ஆனால் இப்போது உங்கள் அளவில் நீங்கள் இசையுலகுக்கு ஏதாவது செய்ய வேண்டாமா...?"**

"அந்த உந்துதல் நிறைய இருக்கிறது... நேரம் இல்லை என்று இனி காரணம் சொல்ல முடியாது... ஒரு திட்டம் முளைவிட ஆரம்பித்திருக்கிறது என்பதை மட்டும் இப்போது சொல்கிறேன். சில இளம் கலைஞர்கள் அதில் ஈடுபட்டிருக்கிறோம்... அது இறுதியான வடிவம் பெறுகிற காலகட்டத்தில் வெளிப்படுத்துவோம்."

சந்திப்பு : **சிஷ்யா**

அட்டை வண்ணப்படம், படங்கள் **யோகா**

## திருப்போரூர் அருள்மிகு கந்தசுவாமி திருக்கோயில் திருப்பணி





தமிழ்நாட்டு [illegible] கந்தசுவாமிப் பெருமான் திருக்கோயில் மிகவும் புகழ் பெற்றது. மதுரை மீனாட்சி அம்மன் அருளாணை பெற்று அங்கிருந்து இங்கே எழுந்தருளி இந்தக் கோயிலை ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் 450 ஆண்டுகளுக்கு முன் நிறுவினார்கள்.

மூலஸ்தானத்தில் எழுந்தருளியுள்ள மூர்த்திக்கு, கந்தசுவாமிப் பெருமான் என்று பெயர். மூலவர் சுயம்பு மூர்த்தி. சிதம்பர சுவாமிகள் இவ்வாலயத்தில் மிக சக்தி வாய்ந்த, எல்லா நற்பலன்களையும் அளிக்கின்ற சீரிய யந்திர பீடத்தை அமைத்துள்ளார்கள். ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் இப்பெருமான் மீது "திருப்போரூர் சன்னதி முறை" என்ற தெய்வ நலம் சான்ற நூலினை அருளிச் செய்துள்ளார்கள். 1984-இல் இந்தக் கோயிலுக்குக் குடமுழுக்கு நடைபெற்றது. 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற வேண்டும் என்பது நியதி. அதற்கு இணங்க இவ் ஆலயத்தின் விடுபட்ட திருப்பணிகளைத் துவக்கி, குடமுழுக்கு விழாச் செய்ய சான்றோர்களும் ஆன்றோர்களும் திட்டமிட்டுள்ளார்கள்.

இதைக் கண்ணுறும் ஆத்திகப் பெருமக்கள் அனைவரும் தங்களால் இயன்ற பொருள் உதவி செய்து திருப்பணி நிறைவேற வழிவகை செய்து அருள்மிகு கந்தசுவாமிப் பெருமான் திருவருளைப் பெற்று உய்வார்களாக.

**நிர்வாக அதிகாரி,** அருள்மிகு கந்தசுவாமி திருக்கோயில்,
திருப்போரூர், செங்கை - எம்.ஜி.ஆர் மாவட்டம்.



# அத்தை மனசில் என்ன குறை?

மகனும் மருமகளும் காலை டிபனை அள்ளிப் போட்டுக் கொண்டு ஆபீஸ் சென்று விட்டதும் பசியும் துக்கமும் மேலிட இட்லியைத் தட்டில் போட்டுக் கொண்டு சாப்பிட முனைந்தாள் பார்வதி. மருமகள் லதா அவளுக்கு சொந்த அண்ணன் மகள்தான்! சின்ன வயதிலிருந்தே தூக்கி வளர்த்த குழந்தைதான் என்றாலும் மருமகள் என்று வந்துவிட்டால் மாமியார் அசல் மனுஷியாகி, விரோதியாகத்தான் தெரிவாளோ?

பரபரப்பாக சமையலை முடிப்பது, எதையும் நேர்த்தியாகச் செய்வது எல்லாவற்றிலும் லதா திறமைசாலிதான் என்றாலும் பார்வதிக்கு மனதில் எழுந்த ஏக்கம் பெரியதாக வளர்ந்து, இதயத்தையே அடைப்பது போல இருந்தது.

மாமியாரை 'சாப்பிட்டீங்களா' என்று கூடக் கேட்கத் தோன்றாதோ ஒரு பெண்ணுக்கு?

மகன் ரவிதான் என்னவோ மிஷின் மாதிரி வருவதும், பரக்க பரக்கச் சாப்பிடுவதும் ஆபீசுக்கு ஓடுவதுமாக இத்தனை நாள் இருந்து விட்டான். இந்தப் பெண்ணுமா இப்படி இருக்கணும்! பெண்ணுக்குப் பெண் என்று இல்லாவிட்டால் போகிறது; அத்தை என்ற உறவுப் பாசம் கூடவா இந்தப் பெண்ணுக்கு வராமல் போய்விட்டது? சே...

டிபனை வெறுப்போடு அரைகுறையாக சாப்பிட்டு, தட்டைக் கழுவினாள்.

வழக்கமாக இரவு சாப்பிடத் தட்டை எடுத்தபோது உள்ளே மகனும் மருமகளும் ஆபீஸ் வேலைகளைச் செய்தபடி பேசுவது கேட்டது.

"அத்தை இரண்டு நாளா சரியாக சாப்பிடுவதே இல்லை! நீங்கள் என்னம்மான்னு ஒரு வார்த்தை விசாரிக்க மாட்டீங்களோ?" இது லதா.

"நான் என்னிக்குமே கேட்டது இல்லை. அம்மா சாப்பிடும் சமயம் தண்ணி குடிக்கிற சாக்கிலே போய்ப் பார்த்துவிட்டு வருவேன். அவ்வளவுதான் ! நீதான் இந்த வீட்டுக்கு வந்த புதுப்பெண்! நீதான் விசாரிக்கணும்! கேட்கிறதுக்கு என்ன? அதுவும் வேற்று மனுஷியா? அத்தைதானே?"

"இது நல்லா இருக்கே? இது அவங்க வீடு... நீங்க அவங்க பிள்ளை! இத்தனை நாள் அத்தை உங்களோட இருந்து சமைத்துப் போட்டு தானும் சாப்பிட்டுக் கொண்டு சகஜமாக இருந்தவங்க! அவங்களைப் போய், நான் திடீர்னு 'நீங்க ஒழுங்கா சாப்பிட்டீங்களா, தூங்கினீங்களான்னு கேட்டா அவங்க என்னைப் பத்தி என்ன நினைப்பாங்க? நான் வந்துவிட்டதாலே, 'தான் இந்த வீட்டிலே இனி ஒரு விருந்தாளியோன்னு' அவங்க மனசுலே பட்டுடக் கூடாது இல்லையா? வீட்டுக்கு வந்த திடீர் விருந்தாளிகளைத்தான் இப்படி எல்லாம் உபசரிக்கணும்ம்னு எனக்குத் தெரியும்! இருந்தாலும் இன்னிக்குப் பாத்திரத்தை எடுத்து வைக்கும்போது சாதம் மிச்சம் இருந்தா கட்டாயம் கேட்கத்தான் வேணும்! ஏன்னா, அம்மா வயிறார சாப்பிட்டாதான் அந்த வயிற்றில் பிறந்த பிள்ளைங்க நல்லா இருப்பாங்க. அத்தை மனசிலே என்ன குறைன்னு இன்னிக்கு கேட்டே விடுவேன்!"

அன்று இரவு பாத்திரத்தில் சாதம் மிஞ்சவும் இல்லை. மருமகள், மாமியாரைக் கேட்கவும் இல்லை. வயிறோடு மனசும் நிறைந்து இருந்தது பார்வதிக்கு.

ரமணி ரங்கநாதன்



# குறைபட்டுக் கொள்கிறாரே கமல்...?

● நெய்தல் எஸ். ஸ்ரீதர், நெய்தவாசல்.

*? 'காவிரியில் தண்ணீர் விட மறுத்தால் நல்லெண்ண பாதயாத்திரை நடத்தப்படும்' என மணி சங்கர் அய்யர் கூறியுள்ளாரே...?*

! கர்நாடக அரசு, நடுவர் மன்றத் தீர்ப்பை அமுல்படுத்தாதபோதே பாதயாத்திரை நடத்தியிருக்கலாமே! ஏன் செய்யவில்லையாம்? மத்தியில் நரசிம்மராவ் இருக்கும் போது ஒரு மாதிரியும் தேவேகௌடா இருக்கும போது ஒரு மாதிரியும் பேசினால், மணி சங்கர் அய்யரே 'ஒரு மாதிரி'தான் என்று எண்ணத் தோன்றுகிறது!

● ஜி. இந்திரா, திருச்சி - 14.

*? 'தமிழில் கையெழுத்துப் போடத் தெரியாதவர்கள் மாநிலத்தை விட்டுச் சென்று விடலாம்' என்று கூறுகிறாரே தமிழ்க்குடிமகன்; மற்ற மாநிலங்களிலும் இதே மாதிரி உத்தரவு அமுலுக்கு வந்தால் என்ன பண்ணுவாராம்?*

! திண்டாட்டமாகத்தான் போகும்! தாய் மொழிப்பற்று அவசியம்தான். அதற்காக இப்படியெல்லாம் பேசுவது ரொம்ப ரொம்ப மிகை. 'அரபிக் எண்களுக்குப் பதில் தமிழ் எண்கள் புகுத்துவோம்' போன்ற தீவிர உளறல்களும் அபாயமானவை.

● இரா. திலீப், திருச்சி - 14.

*? இனி ரஜினி செய்ய வேண்டியது என்ன...?*

! சந்தேகமென்ன...? அடுத்த படத்தில் நடிக்க வேண்டியதுதான்!

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

*? 'எனக்கு வாங்கிப் பழக்கமில்லை; கொடுத்துத்தான் பழக்கம்' என முன்னாள் முதல்வர் ஜெயலலிதா கூறியிருக்கிறாரே?*

! தோற்றுப் போன விரக்தியில் மாற்றிச் சொல்லியிருப்பார்... விட்டுத் தள்ளுங்கள்!

● என். ஆர். ரவி, திருவெண்காடு.

*? 'லஞ்சத்தை ஒழிப்பதற்காக 'இந்தியன்' படமெடுத்தேன். ஆனால் அதைப் பார்ப்பதற்கு 'பிளாக்' கில் டிக்கெட் எடுக்கிறார்கள்!' என்று கமல் ஹாசன் குறைபடுகிறாரே...?*

! இதே கமல்தான் 'நாங்கள் சமுதாயத்தைச் சீர்திருத்தப் படம் எடுக்கவில்லை; எங்கள் மீது மட்டும் ஏன் பொறுப்பைச் சுமத்துகிறீர்கள்?' என்று ஒரு கூட்டத்தில் பேசினார். நோக்கில் தெளிவில்லை என்பது பேச்சிலும் 'சினிமாவிலும் வெளிப்படும்போது சீர்திருத்

• சோதனையாகிப் போன சொத்துக்கணக்கு!



• என்ன மாதிரி...?



தத்தை மட்டும் எப்படி எதிர்பார்க்க முடியும்?

● கே. ஆர். வேலுச்சாமி, வடக்கலூர்.

*? தங்களைச் சமீபத்தில் அதிர்ச்சிக்கு உள்ளாக்கிய சம்பவம்?*

! நேரு நினைவு நாளன்று தலைவர்கள் அஞ்சலி செலுத்தப் போனதால் சாந்திவனப் பகுதியில் கடும் காவல் பரிசோதனை. புதர்களில் ஒளிந்திருக்கக்கூடிய சமூக விரோதிகளை விரட்ட கண்ணீர்ப் புகை போட, அந்த காவல் துறை நடவடிக்கையினால், அங்கிருந்த நீர் நிலைகளில் நீந்திய வாத்துகள் இறந்து போயின!

● மு. இரவிச்சந்திரன், சேலம் - 9.

*? புதிய சட்டசபைத் தொடரில் யாருடைய பேச்சு தங்களைக் கவர்ந்தது?*

! த.மா.கா. உறுப்பினர் சொக்கர். பினாமி பரிவர்த்தனைகளைத் தவிர்க்க வழி சொன்னதும்; மதுவிலக்குப் பிரசாரப் பணியில் மாவட்டத்துக்கு ஆயிரம் பெண்களை அமர்த்துவது வீண் செலவு என்று சுட்டிக்காட்டியதும் வரவேற்க வேண்டிய ஆரோக்கிய சிந்தனைகள்.

● ஜி.எம். பாலகுரு, திருமருகல்.

*? அ.தி.மு.க.வில் ஒரு கோடிக்கு மேற்பட்ட உறுப்பினர்கள் இருக்கிறார்கள் என்று ஜெயலலிதா கூறுவது பற்றி...?*

! ஆக, சொந்தக் கட்சிக்காரர்களே அவருக்கு வாக்களிக்காமல் போகும் அளவுக்குத் தவறு செய்திருக்கிறார் என்பது உறுதியாகிறது.

● எஸ். எஸ். ஆர். லிங்கம், தமாப்பட்டி.

*? 'மூன்று சொந்த வீடுகளை வாடகைக்கு விட்டு விட்டு, முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர்.வி. அரசாங்க வீட்டில் வசிக்கிறார்' என அமைச்சர் துரைமுருகன் குற்றம்சாட்டியிருக்கிறார். ஆர்.வி. இப்படிச் செய்வது தவறு இல்லையா...?*

! பாதுகாப்பு கருதித்தான் அவருக்குத் தனி அரசு வீடு தரப்பட்டது என முன்பே விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. அத்துடன் விட்டிருக்க

❏ ரூ. 25 பரிசு பெறுபவர் : எஸ்.ராமசுப்பிரமணியன்,

லாம். அப்படியின்றி ஒரு முன்னாள் ஜனாதிபதியை அமைச்சர் இவ்வாறு சர்ச்சைக்கு உட்படுத்தியிருப்பது அனாவசியமானது. அதன் பிறகு விளக்கம் அளித்த ஆர்.வி.யாவது, 'சட்ட மீறல் எதுவும் நடக்கவில்லை' என்று சொன்னதோடு விட்டிருக்கலாம். அவர் சொத்துக் கணக்குக் காட்டப் போக, அதைக் கண்டு வீரமணி வீறுகொண்டு எழ... ஒரே ரசாபாசமாகி விட்டது போங்கள்!

● **எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.** ❑

***? முஸ்லீம்களை ஆதரிக்கும் அரசியல்வாதிகள், இந்துக் கட்சியான பி.ஜே.பியை வெறுப்பது ஏன்?***

! முஸ்லீம் எதிர்ப்பு, ஹிந்து எதிர்ப்பு என்பது எவ்வளவு தவறோ, அவ்வளவுக்கு ஹிந்து ஆதரவு முஸ்லீம் ஆதரவு என்பனவும் ஒரு மதச் சார்பற்ற நாட்டில் தவறுதான்! மதச்சார்பின்மை என்பதை மறுபரிசீலனை செய்ய வேண்டும் – புதிய அத்தியாயம் எழுத வேண்டும் என காங்கிரஸின் அதிகாரபூர்வ பேச்சாளர் காட்கில் சொல்லியிருப்பதை வரவேற்கலாம். மதச்சார்பின்மை என்பது மதங்களையோ கடவுளையோ புறக்கணிப்பதல்ல... எம் மதமும் அரசுக்குச் சம்மதம் என்ற அளவில் அனைவருக்கும் சம வாய்ப்புத் தருவதே அரசின் மதச்சார்பின்மையாக இருக்க முடியும். அதுதான் தெய்வபக்தியை வளர்த்து, நல்லாட்சியை வழங்கச் செய்து, நல்ல குடிமக்களையும் உருவாக்கும்.

● **ச. சசிகலா தேவி, விருதுநகர்.**

***? முன்பு காலில் விழுந்த மந்திரிகள் இப்போது ஜெயலலிதாவுக்கு எதிராகப் போர்க் கொடி உயர்த்தியிருப்பது பற்றி...?***

! 'ஜெ'வுக்கு எதிராகப் போர்க் கொடி ஏந்தியிருக்கிறார்கள் என்பதை விட உங்கள் பெயர் கொண்டவரை எதிர்த்துப் போர்க் கொடி பிடிக்கிறார்கள் என்பதுதான் சரி. அது ஜெ எதிர்ப்புப் போராக மாறுமுன்னர் ஜெ அவரை விட்டகன்று திருந்தினால், அ.தி.மு.க. வுக்கும் நல்லது; அதன் தலைவிக்கும் நல்லது...!

● **வி.பி. மரகதவள்ளி, மதுரை - 16.**

***? என் பிறந்த நாளைக் கொண்டாடவே வேண்டாம் என்று கலைஞர் சொல்லியிருந்தால் இன்னும் சிறப்பாக இருக்கும் அல்லவா?***

! அப்படிக் கூறியிருந்தால் அறிவாலய கும்பவில் எம்.எல்.ஏ.யின் பணம் பறிபோயிருக்காது. ஆனால் தொண்டர்களுக்கு ஏமாற்றம் ஏற்பட்டிருக்கும். லட்சக்கணக்கில் நன்கொடை வசூலாகி அது தொண்டு நிறுவனங்களுக்குக் கிடைக்காமல் போயிருக்கும். பல்லாயிரக்கணக்கான மரங்கள் நடப்பட்டிருக்காது. எனவே 'கொண்டாட வேண்டாம்' எனக் கூறாமல் ஆடம்பரம் வேண்டாம் என்று மட்டும் சொன்னது சரிதான். மரங்கள் நடப்பட்ட பணிக்கு 'ஃபாலோ அப்' மட்டும் மிக அவசியம்!

● **ஏ. பிரதாபன், சென்னை - 82.**

***? தேர்தல் தோல்வி, பரீட்சை தோல்வி, காதல் தோல்வி – எது சகிக்க முடியாத தோல்வி?***

! இவற்றையெல்லாம் விட தோல்வியைக் கண்டு சோர்ந்து போய் விடுவதுதான் மிகப் பெரிய தோல்வி!

● **பி. ஜெயபிரகாஷ், சர்கார்பதி.**

***? முதல்வர் கருணாநிதி தமக்குப் பாதுகாப்பே தேவையில்லை என்று சொல்வது சரியா...?***

! சரியில்லை! பொது மக்களுக்குத் துன்பம் தராத வகையிலும் அவரை அணுகுவதே கடினம் என்று ஆகிவிடாத அளவிலும் பாதுகாப்பு தரப்படத்தான் வேண்டும்.

● **ஏ. பாலமுருகன், திருநெல்வேலி - 8.**

***? மாநிலத்தில் காங்கிரஸை எதிர்த்துப் போட்டியிட்ட தி.மு.க. இன்று மத்தியில் அதே காங்கிரஸுடன் கைகோத்துச் செல்கிறதே... இது தர்மமா...?***

! ஐக்கிய முன்னணியுடன் காங்கிரஸ் கை கோத்துக் கொண்டிருந்தாலும் எப்போது வேண்டுமானாலும் கைவிட்டு விடக்கூடும் என்ற நிலைதான். உடனடியாக மறு தேர்தலைத் தவிர்க்க ஒரு தாற்காலிக ஏற்பாடுதான் இப்போது நிறுவப்பட்டுள்ள ஆட்சி. அதனால்தான் அனைவரும் ஏற்கத்தக்க குறைந்தபட்ச திட்டம் ஒன்று தேவைப்படுகிறது. அந்த அளவில், இதிலும் (தி.மு.க.வின் செயல்பாட்டிலும்) ஒரு தர்ம நியாயம் இருக்கவே செய்கிறது.

● **ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.**

***? நாட்டில் பஸ் விபத்து வயிற்றைக் கலக்குகிறதே...?***

! பஸ் டிரைவர்களுக்காவது ஓட்டுனர் பயிற்சிப் பள்ளி இருக்கிறது. லாரி டிரைவர்களுக்கு அதுவும் இல்லை. பள்ளிகள் மேம்படுத்தப்பட்டு, லைசென்ஸ்கள் வழங்கும் முன் கடுமையான பரீட்சைகள் நடத்தப்பட்டால் விபத்துகள் குறையும். விபத்துகளின் போது சாலை விதிகள் வேண்டுமென்றே மீறப்பட்டிருப்பது உறுதியானால் அபராதத்துடன் லைசென்ஸ் ரத்து போன்ற தண்டனைகளையும் கண்டிப்புடன் அமுல்படுத்தலாம்.

• அளவோடு தேவைதான்!



• எது பழகும்...?



• அ. ஆரோக்கியம்



# வட்டமேஜை

❖ 'மாறிவரும் அப்பாக்கள்' கட்டுரை படித்தேன். மனம் விரும்பி, கணவர்கள் ஏதாவது உதவி செய்தாலும், அதில் குறைசொல்லி ஆர்வத்தைக் குறைப் பதில் பெண்களுக்கு ஈடு பெண்கள் தான்!

திருச்சி - 14, இரா. திலீப்.

❖ 'மாறி வரும் அப்பாக்கள்' என்று கூறு வதைக் காட்டிலும் 'மாறி விட்ட அப்பாக்கள்' என்று தலைப்பு இடுவதே மிகவும் பொருத்தமாகும். என்னுடைய வயது 24. எனக்கு விவரம் தெரிந்த நாளி லிருந்து, காலையில் எழுந்து பால் வாங்குவதிலிருந்து, இரவில் பாத்திரங் கள் அனைத்தையும் கழுவி அடுக்குவது வரை, அனைத்து வீட்டு வேலைகளி லும் என் அப்பாவின் பங்குதான் அதிக மாக இருக்கும். அரசு அலுவலரான எனது தந்தை, கடந்த ஜனவரி மாதம் ஓய்வு பெற்றார். கேட்கவே வேண்டாம்; வீட்டின் அத்தனை வேலைகளும் அப்பாதான்! (சத்தியமாக என் அம்மாவுக்குப் பயந்தல்ல!) 'கவர் ஸ்டோரி'யில் உள்ள கருத்துக்கள் மற் றும் சம்பவங்கள் அனைத்தும் எங்கள் குடும்பத்திலும் உள்ளன என்று நினைத்து வியந்து போனேன்! எது எப்படியோ, எனக்குத் திருமணம் ஆனவுடன், என் தந்தையைப் போலவே எல்லா வீட்டு வேலைகளிலும் என் பங்கு கட்டாயம் இருக்கும்!

மதுரை - 21, மா. கார்த்திகேயன்.

❖ தலையங்கம் படித்தேன். பிரதமர் வாஜ்பாயின் பேராசை முடிந்து, அடுத்ததாக தேவேகௌடா பிரதமர்! அவர் கூட ஒரு வருடம் நீடிப்பாரா என் பது சந்தேகம். காரணம் கூட்டணிக் கட்சிகளிடையே ஒற்றுமைக் குறைவு., பிறகு நிலையான ஆட்சிக்குத் தகுதியா னது காங்கிரஸ் ஒன்றுதான் என்று நரசிம்மராவ் வரலாம். எம்.பிக்களை விலைக்கு வாங்கி, மீண்டும் மெஜா ரிட்டி இல்லாமலேயே ஆட்சியில் அமர்வதற்குப் பல தந்திரங்களையும் அவர் கையாளலாம். இது தான் நடக்கப் போகிறது பாருங்கள்!

கும்பகோணம், புலவர். எஸ். கே. மூர்த்தி.

❖ சென்னையில் முப்பது வாரங்களைக் கடந்து ஓடிக் கொண்டிருக்கும் அந்த இந்திப் படம், எங்கள் ஊரில் பதினொன்கு நாட்களில் ஓடியே போய் விட்டது. ஆனால், முத்து படமோ இரண்டு தியேட்டர்களில் நூறு நாட்கள் ஓடியிருக்கிறது!

திருநெல்வேலி டவுன், வீ. முத்தையா.

❖ மறைந்த வி.என். ஜானகி பற்றிய புகழுஞ்சலி ரத்தினச் சுருக்கமாகவும், வள்ளலின் வாரிசு என்பதைச் சுட்டிக்காட்டியதால் சிறப்பாகவும் இருந்தது!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

**ரூ. 20 பரிசு பெறும் கடிதம்**

❖ ஸ்டாலினிடம் சளைக்காமல் கேட்ட கேள்விகளும், அதற்கு அவர் சாதுர்யமாக அளித்த பதில்களும் பிரமாதமாக இருந் தன. பத்திரிகைகள் பலவும் ஸ்டாலி னுக்கு மந்திரி பதவி தராதது குறித்து அவரவரின் கற் பனைச் சிறகுகளை விரித்துக் கொண்டிருக்கும் இந் நேரத் தில், கட்சிப் பணியைப் பெரிதாக நினைத்து, கலைஞர் தர முன்வந்த மந் திரி பதவியையே துச்சமாக வேண்டாமென்று சொல்லிவிட்டதாக அவர் விட்டிருக்கும் பிரும் மாஸ்திரம், இப்பிரச்னைக்கு அழுத்தமான முற்றுப் புள்ளியொன்றை இப்போதைக்கு வைத்திருக்கிறது. Why? என் பதைக் காட்டிலும் Why not? என்ற கேள்வியைப் பத்திரிகையாளர் கள் முதல் பாமரர்கள் வரை கேட்க வைத்து விட்ட கலைஞரும் சாதாரண ஆளா என்ன?

மதுரை - 14, எஸ். வைத்தியநாதன்.

❖ 'இந்தியன்' பட விமர்சனத்தை எல்லாப் பத்திரிகைகளும் விமர்சித்து வரும் நேரம் இது. 'கல்கி'யில் வந்த விமர்சனம் மட்டும் சற்று வித்தியாசமாகவே படுகிறது. படத்தின் 'தீம்' என்னவென்று புரிந்து கொண்டு விமர்சித் திருந்த தரம், மணியாக இருந்தது.

சென்னை - 39, சிம்மவாஹினி.

❖ எந்தப் படங்களுக்கு தேசிய விருது கிடைக் கும் என 'கல்கி' கடந்த சில ஆண்டுகளாக விமர்சித்து வந்துள்ளதோ, அவையே தொடர்ந்து பரிசு பெற்று வருகின்றன. இவ் வாண்டும், நீங்கள் எழுதியது போல் பாரதி ராஜாவின் 'அந்திமந்தாரை' படத்திற்கும் கிடைத்துள்ளது. கல்கியின் அரசியல் கணிப்பு மட்டுமல்ல; திரைப்படக் கணிப்பும் சரியா கவே அமைந்து விடுவதை எண்ணி வியந்தேன். பாராட்டுக்கள்!

கோட்டையூர். ச. கோமதி.

கல்கியின் அரசியல் கணிப்பு மட்டுமல்ல...

# இந்தி தெரியாத பிரதமர்!

ஆறு ஆண்டுகள் இடைவிடாமல், கர்நாடக முதலமைச்சராக இருந்தவர் தேவராஜ் அர்ஸ். அவருக்கு எதிராக அரசியல் நடத்தினார் தேவேகௌடா. தேவராஜ் அர்ஸ் ஊழல் செய்தது, உறவினர்களுக்குச் சலுகை காட்டியது போன்ற குற்றச்சாட்டுகளை விசாரிக்க குரோவர் கமிஷன் நிறுவப்பட்டது. அந்த கமிஷனிடம் ஆதாரங்களோடு, குற்றச்சாட்டுகளை நிரூபணம் செய்தவர் இன்றைய பிரதமர்!

தொடர்ந்து நடந்த சட்டசபைத் தேர்தலில், ஆட்சியைப் பிடித்து விடலாம் என்ற நம்பிக்கையுடன் காத்திருந்தார் கௌடா. ஆனாலும், தேர்தல் முடிவுகள் தேவராஜ் அர்ஸுக்கு சாதகமாகவே இருந்தன!

அந்தச் சூழ்நிலையில் பத்திரிகையாளர்கள், "முதலமைச்சராகக் கூடிய வாய்ப்பு, உங்களுக்குக் கிடைக்காமல் நழுவிப் போய் விட்டதே!" என்று கேட்டார்கள். "மொரார்ஜி கூடத்தான் இரண்டு முறை பிரதமர் பதவியை நழுவ விட்டார். மீண்டும் எண்பது வயதில் பிரதமராகவில்லையா? எனக்கு வயது 44 தானே? நானும் ஒரு நாள் முதலமைச்சராகாமல் போய்விடுவேனா என்ன?" என்று பதில் சொன்னார் கௌடா. அவரது ஆசை நிறைவேறியபோது வயது அறுபது.



முதலமைச்சர் பதவியை எட்ட பதினாறு ஆண்டுகள் காத்திருக்க நேர்ந்தாலும், அதை அடைந்த இரண்டே ஆண்டுகளில் பிரதமர் பதவியே அவரைத் தேடி வந்து விட்டது!

'எதுவுமே ஆரம்பத்தில் சுலபமாக இருக்காது. அதற்காகச் சோர்ந்து போய் உட்கார்ந்து விடக் கூடாது!' என்பதுதான் தேவேகௌடாவின் பாலிஸி.

பிரதமர் பதவிக்கு, இவரது பெயரை முதலில் தீர்மானித்தது காங்கிரஸ் தரப்பில்தான். முதலில், இதனை நம்பாவிட்டாலும், சரத்பவார், ராஜேஷ் பைலட், பல்ராம் ஜாக்கர் போன்ற காங்கிரஸ் பெருந்தலைகள் நேரடியாகத் தேவேகௌடாவிடம் பேசிய பிறகுதான் அவருக்கே நம்பிக்கை வந்தது. ஆனாலும், மூன்றாவது அணியில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று விசாரித்துத் தெரிந்து கொண்டு, அதன் பிறகுதான் தம்மளவில், பிரதமர் பதவியை ஏற்கத் தயாரானார் தேவேகௌடா.

ஹார்தனஹள்ளி- தோடேகௌடா- தேவே கௌடா என்பது ஹெச்.டி. தேவேகௌடாவின் முழுப் பெயர். (ஊர்ப்பெயரையும், தந்தை பெயரையும் இனிஷியலாய்ப் போட்டுக் கொள்ளுவது வழக்கம்) இவர் சிவில் இஞ்சினியரிங் டிப்ளமாவில் சேர்ந்து படித்தது, இவரது அப்பாவுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. 'விவசாயம் பார்க்க வேண்டியதுதானே!' என்று எண்ணினார் அப்பா.

சிவில் இஞ்சினியரிங் காண்டிராக்டராய் வாழ்க்கையைத் துவக்கிய தேவே கௌடா, தமது இருபத்து எட்டாவது வயதில் சுயேச்சையாய்த் தேர்தலில் போட்டியிட்டு வென்

றார். அதுவே அவர் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை.

69-ல் காங்கிரஸ் உடைந்தபோது, நிஜலிங்கப்பா தலைமையிலான காங்கிரஸில் சேர்ந்தார் தேவேகௌடா. கர்நாடக அரசியலின் 'லவ-குசா'க்களான வீரேந்திர பாட்டீல், ராமகிருஷ்ண ஹெக்டே இருவரும், 71ல் நடந்த லோக் சபா தேர்தலில் படுதோல்வி அடைந்தார்கள். எனவே அடுத்து நடந்த சட்டசபைத் தேர்தலில் அவர்கள் போட்டியிடவில்லை. அப்போது, சட்டசபைத் தேர்தலில் வெற்றி பெற்றார் தேவேகௌடா. கர்நாடக அரசியலில், கவனிக்கப்பட வேண்டிய ஓர் இளம் தலைவர் என்ற அந்தஸ்தைப் பெற்றார்.

சுயேச்சை எம்.எல்.ஏ. முதல், பலகட்சி கூட்டணி ஆட்சியின் தலைமை வரை அரசியலில் பல பொறுப்புகளைப் பார்த்து விட்டார் தேவே கௌடா. படு தோல்வியையும் அவர் சந்தித்ததுண்டு. 1989ல் நடந்த சட்டசபைத் தேர்தலில் 222 இடங்களில் அவர் கட்சி போட்டியிட்ட போது, இவருக்குக் கிடைத்தவை வெறும் இரண்டு இடங்கள்தான்! அது மட்டுமில்லை; தாம் போட்டியிட்ட இரண்டு தொகுதிகளிலுமே தோற்றுப் போனார்!

“நல்ல நிர்வாகத்தின் ரகசியமே, திறமையான நபர்களை அமைச்சர்களாகவும், அரசு அதிகாரிகளாகவும் தேர்ந்தெடுத்து, அவர்களைச் சுதந்தரமாய்ப் பணியாற்ற விடுவதுதான்'' என்று கூறும் தேவே கௌடாதான் இந்தி தெரியாத முதல் பிரதமர். இருப்பினும் இன்னும் மூன்று மாதங்களில் இந்தி கற்றுக் கொண்டு விடுவார் என்கிறார்கள் அவருக்கு நெருக்கமானவர்கள்.

தம்மை 'நகரத்து நாகரிக மனிதன்' என்பதை விட, கிராமத்து 'மண்ணின் மைந்தன்' என்று கூறி பெருமைப்பட்டுக் கொள்ளுபவர் பிரதமர் கௌடா. இருபத்து நாலு மணி நேரமும் அரசியலையே நினைத்துக் கொண்டிருக்கும் மனிதர்.

அமெரிக்காவின் கென்டுகிஃப்ரைட் சிக்கன் தாக்கப்பட்டபோது முழு பாதுகாப்பு கொடுத்ததோடு, அதற்குக் காரணமான விவசாயிகள் சங்கத் தலைவர் நஞ்சுண்டசாமியை ஜெயிலுக்குள்ளும் தள்ளினார். இந்த நடவடிக்கை அந்நிய முதலீட்டாளர்களுக்கு கௌடாவின் மீதான நம்பிக்கையை அதிகப் படுத்தியது.

கர்நாடகப் பிரச்சினைகளை இவர் பரபரப்பற்ற ராஜதந்திரத்துடன் அணுகினார். பிரச்னைகளை நீட்டிக்க விடாமல் தீர்ப்பது, மௌனமாய் இருந்து காரியம் சாதிப்பது (இதில் நரசிம்மராவின் பாணி வேறு; இவரது பாணி வேறு)– இவைதாம் தேவேகௌடாவின் வெற்றி ரகசியங்கள்.

ஹைப்பர் டென்ஷன், டயாபடீஸ், டான்ஸில்ஸ் போன்ற உடல் உபாதைகள் இருந்த போதும், வேளாவேளைக்கு மாத்திரைகளை விழுங்கிவிட்டு, தினம் இருபது மணி நேரம் வரை சுறுசுறுப்பாய் பணி புரிவார். இரவில் எத்தனை லேட்டாய் படுக்கப் போனாலும் அதிகாலையில் ஐந்து மணிக்கு எழுந்து விடுவார். இரண்டு மாப்பிள்ளைகளுள் ஒருவர் இருதய நிபுணர். மற்றவர் ஆர்த்தோ சர்ஜன். உடல் நலம் கருதி ஓய்வெடுக்கும்படி மாப்பிள்ளைகள் இவருக்கு ஆலோசனை கூறினாலும், 'சும்மா இருப்பதுதான் என் முதல் எதிரி' என்று கூறி மறுத்து விடுவாராம் தேவேகௌடா!

“நான் ஒரு ஆப்டிமிஸ்ட்'' – என்று அடிக்கடி சொல்வது தேவேகௌடாவின் வழக்கம். வீரப்பமொய்லி கர்நாடகத்தை ஆட்சி புரிந்து கொண்டிருந்தபோது விவசாயிகளை வைத்துக் கொண்டு மண்டியாவிலும் ஹாசனிலும் போராட்டங்களை நடத்திக் கொண்டிருந்தார் கௌடா. "அடுத்து நாங்கள் தான் ஆட்சிக்கு வருவோம்'' – என்பார். அப்படியே அவர் கையிலேயே ஆட்சி கிடைத்தது. பாராளுமன்றத் தேர்தல் வந்ததும், "இங்கே ஜனதாதளம்தான் அதிக இடங்களைக் கைப்பற்றும்'' என்றார். அதே போல் பதினாறு இடங்களை ஜனதாதளம் பிடித்தது. அதே தொனியில் இப்போதும் சொல்கிறார். "நாங்கள் நிச்சயம் ஐந்தாண்டு காலங்களுக்கு ஆட்சி புரிவோம். நான் எப்போதுமே ஒரு ஆப்டிமிஸ்ட்.''

தேவேகௌடாவின் திருமதி, சென்னம்மா சொன்னார் : "ஹள்ளியாயிருந்தாலென்ன (கிராமமாயிருந்தாலென்ன) டில்லியாயிருந்தாலென்ன என் கணவருக்கு மக்கள் பணி செய்வதே முக்கியம்.''

பெங்களூரிலிருந்து : **அமுதவன்**

பத்திரிகை செய்திகளிலிருந்து : **எஸ்.சந்திரமௌலி**

---



''டேபிள் மேல என்ன சார் பெரிய பெரிய பைலா அடுக்கி வச்சிருக்கீங்க...?''

''அதுவா, என்னை உடனடியா, சி.பி.ஐ. அலுவலகத்துக்கு வரச் சொல்லி அவுங்க அனுப்பிச்சிக்கிட்டிருக்குற சம்மன் பைல் சார்!''

– ஆர். பி. செல்வம்




# ஜாதி, மத பேதம் போதாதா? நிறபேதம் வேறா!

●● நானொரு தனியார் கல்வி நிறுவன அலுவலக ஊழியன். பள்ளி மாற்றுச் சான்றிதழ் வேண்டி ஒரு பெண் அதிகாரி- தொலைபேசித்துறையைச் சார்ந்தவர்– அதற்கான விண்ணப்பம் எழுதிக் கொடுத்தார். பொதுவாய் சான்றிதழ் தர மூன்று நாட்கள் பிடிக்கும் எனக் கூறி அனுப்பினேன். குறிப்பிட்ட நாளில் அவரின் அலுவலகத்திலிருந்து ஒரு பணியாளரை அனுப்பியிருந்தார். அவர் என்னிடமே, "இங்கே கறுப்பா... ஒருவர் இருக்கிறாராமே அவரிடம் எங்கள் அம்மா டீசி வாங்கி வரச் சொன்னார் என்று கூறினார். "ஒரு மத்திய அரசு ஊழியர், ஒரு பணியாளரிடம் நிறபேதத்தை அடையாளமாய் வைத்துத் தான் பணிசெய்யச் சொல்லுவாரா? இது முறையல்ல" என்று அவரிடம் எடுத்துக் கூறினேன். கறுப்புத் தோலர்களை ஏளனமாய்ச் சொல்லி வருவதை அந்தப் பெண் அதிகாரி இனிமேலும் தொடர மாட்டார் என்றே நினைக்கிறேன்.

நாமக்கல், ஆர். சச்சிதானந்தம்.

●● தமிழகத்தின் பல நகரங்களில் பல லட்சங்கள் செலவு செய்து அழகாக, 50 அடி 60 அடி என உயரமான மணிக்கூண்டுகள் கட்டி, அவற்றில் பொருத்தப்படும் கடிகாரங்கள், பராமரிப்பு சரியில்லாத காரணத்தால் பழுதடைகின்றன. பழுதடைந்த கடிகாரங்கள் பல ஆண்டுகளாகவே செயலிழந்து இருப்பதை சம்பந்தப்பட்ட நிர்வாகம் பொறுப்புடன் கவனிக்குமா?

கும்பகோணம்,

கே.என். பாலகிருஷ்ணன்.

●● மைனாரிட்டி மக்கள் நடத்தும் பள்ளிகளில் பள்ளி துவங்குகையில் குர்ரான், பைபிள் படிப்பதையோ இயேசு, அல்லாவைத் தொழுது பாடுவதையோ அரசு தடுக்கவில்லை. ஆனால் மெஜாரிடி மக்களின் மத உணர்வை மதிக்காமல் பள்ளி துவங்கும்போது "நீராரும் கடலுடுத்த..." என்ற பாடலை மட்டும் பாட அரசு ஆணையிட்டுள்ளது. மெஜாரிடி பிள்ளைகளின் மதவழிபாட்டு உரிமையைப் பறித்திருப்பது ஜனநாயகப் பாகுபாடு அல்லது மதச் சார்பின்மையாகுமா? இறை உணர்வு உள்ள பிள்ளைகள்தாம் ஒழுக்கமும், நேர்மையும் உள்ளவர்களாக விளங்குவார்கள்.

வி.கே. பிள்ளை, திருபுவனம்

●● அண்மையில் திருச்சி மெயின் கார்டு கேட் பகுதியில் தி.க.வினர் பகுத்தறிவு பிரசாரம் செய்தார்கள். மற்றவர்களை சிரிக்க வைக்க முயன்று, ஒரு சிறிய கூட்டத்தைச் சேர்த்து தெரு முனையை அடைத்தார்கள். இந்துமத துவேஷம் தான் அவர்கள் பேச்சில் ஓங்கியிருந்தது. இந்து மத இலக்கியங்களை மேற்கோள் காட்டி மிகவும் கீழ்த்தரமாக விமர்சித்தார்கள். காஞ்சி சங்கராச்சாரியாரை மிகக் கேவலமாக உருவகப்படுத்திப் பேசினார்கள். கேட்க நேர்ந்த மற்ற மதத்தினரும் கூட முகம் சுளித்தார்கள். நாகரிகமாகப் பேசுவது எப்படி என்பதை முதலில் இவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

திருச்சி -3, தி. நாராயணன்,

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

நால் வேதங்களிலே அதர்வ வேதம் ஒரு பரிசோதனைக் கூடம் மாதிரி. மற்ற மூன்று (ரிக், யஜுர், சாம) வேதங்கள் சொல்வதைப் பரிசோதித்துப் பார்க்கிற கூடம்!

இன்றைக்கும் விஞ்ஞானமாக ஒப்புக் கொள்ளப்படற பல உண்மைகள் இந்த அதர்வ வேதத்திலே இருக்கிறது.

தீர்த்தம் என்பது இரண்டு வாயுக்களின் கூட்டுப் பொருள். ஹைட்ரஜன் இரண்டு பங்கும் ஆக்ஸிஜன் ஒரு பங்கும் அதில் உள்ளது என்கிறோம். $H_2O$, $H_2O$ என்று மனப்பாடம் பண்ணுகிறோம்.

அதர்வ வேதம் இதையே 'பிராணம் ஏகம் அன்யத்வே' என்கிறது! அதாவது பிராண வாயு ஒரு பங்கும் இன்னொரு வாயு இரண்டு பங்கும் தண்ணீரில் இருக்கிறது...' என்கிறது!

அங்கிரஸ் மஹரிஷியை தியானம் பண்ணச் சொல்கிறது வேதம் - எல்லா தோஷங்களையும் நிவர்த்தி பண்ணுகிற அளவுக்கு அவர் ஹோமங்கள் பண்ணியிருக்கிறார் என்பதால். சயன யக்ஞம் என்று ஒரு ஹோமம் பண்ணினார் அவர். அதற்கு சந்திர லோகத்திலிருந்து மண் எடுத்து வந்து பூவுலக மண்ணுடன் கலந்து பிசைந்து ஹோம குண்டம் தயாரிக்கணும் என்று சாத்திரம். 'சந்த்ரமஸி க்ருஷ்ணம்' என்று வேதம் சொல்கிறது. (சந்திர மண்டலத்து மண் கறுப்பாகயிருக்கிறது என்று இதற்குப் பொருள்.)

கல்கத்தா, பிர்லா பிளான டோரியத்துக்கு அடியேன் போனபோது, சந்திர மண்டலத்திலிருந்து கொண்டுவரப்பட்ட மண்ணைக் காட்சிக்கு வைத்திருந்தார்கள். கறுப்பாக இருந்த அதைப் பார்த்ததும் 'சந்த்ர மஸி க்ருஷ்ணம்' என்கிறதுதான் ஞாபகம் வந்தது.

வேதம் சொன்ன வாக்யம் பொய் இல்லை...! ஆனால் அன்றைக்கு அவர்கள் ராக்கெட்டில் பறந்து போய் சந்திரனிலிருந்து மண்ணைக் கொண்டு வரல்லை...! அவர்



குறை

கன் கண்ணை மூடிக் கொண்டு 'ஹே சந்திர மண்டலத்து மண்ணே... வா...'ன்னா வந்துடும்! மூடின கண்ணைத் திறந்து பார்த்தால் மண் அங்கே இருக்கும்!

இப்போது நாம் யந்த்ர (இயந்திர) சக்தியைத் தான் நம்ப வேண்டியதாயிருக்கிறது. ஆனால் எல்லாவற்றையும் காட்டிலும் உயர்ந்தது மந்திர சக்தி.

மந்த்ரம் அபரிமிதம் (வரையறையற்றது).

யந்த்ரம் பரிமிதம் (வரையறைக்குட்பட்டது) என்கிறது அதர்வ வேதம். எதிர்காலத்தில் வரவிருந்த யந்திர சக்தி பற்றிக் கூட வேதத்தில் சொல்லியிருக்கிறது பாருங்கள்...!

இப்போது நான் பேசுவதை டேப் ரிகார்டரில் அப்படியே பதிவு பண்ண முடிகிறது. இதை நாம ஏதோ முன்னேற்றம்னு நினைக்கிறோம். ஆனால் அப்படியில்லை அது.... பின்னுக்குத்தான் போயிருக்கிறோம்! இந்த மிஷின் செய்யறதை - டேப் ரிகார்டர் செய்யறதை செய்யக் கூடிய சக்தியுடையவர்களாய் நாம இருந்தோம். ஒரு முறை கேட்டால் அப்படியே மனசுல பதிஞ்சு போயிடும்... இப்போது நாம் சக்தியை வேற விஷயங்களிலே ஏத்தி வைச்சிருக்கோம். அதனாலே அந்த ஆற்றல் இல்லை நமக்கு....

இவ்வளவையும் எதற்குச் சொல்கிறேன் என்றால், வேதம் சொல்வது ஏதோ மாய மந்திரமில்லை; ஆதாரமுள்ள விஞ்ஞானம் என்கிறதுக்காக.

போன வாரம், விஷ்ணு சஹஸ்ரநாமத்திலே நரசிம்ஹ அவதாரம் விசேஷமா சொல்லப்பட்டிருக்கிறதாகச் சொன்னேன். அந்த நரசிம்ஹ அவதாரம் பற்றி அதர்வ வேதம் விஞ்ஞான பூர்வமாக விளக்குகிறது.

பிரஹலாதனுக்கும் ஹிரண்ய கசிபுவுக்கும் நடந்த விவாதத்தை விவரித்துக் காட்டும் அதர்வ வேதம், நரசிம்ம அவதாரத்தை மின் சக்தி என்கிறது! பிரஹலாதன் அஸ்தி (உண்டு) என்று சொல்கிறான்; ஹிரண்ய கசிபு நேதி (இல்லை) என்கிறான்.

அஸ்தி என்கிற பாஸிடிவ் தத்துவமும் நேதி என்கிற நெகடிவ்வும் மோதிக் கொண்டதாலே ஒளியும் ஒலியும் ஏற்பட்டதாம். ஒளிமயமாய் நரசிம்மன் தோன்றினானாம். அவனுடைய அட்டகாசம் ஏழு உலகம் தாண்டிப் போய், பிரும்மா அமர்ந்திருந்த தாமரையை ஓர்



அடி அடித்ததாம்! பிரும்மாவைக் கீழே தள்ளியதாம்!

பிரும்மாவை மட்டும் ஏன் தள்ள வேண்டும்...? 'இருக்கிறவனுக்கெல்லாம் வரத்தைக் கொடுத்துவிட்டு, நீ மட்டும் ஜப மாலையை உருட்டிக் கொண்டு மனைவியின் (சரஸ்வதி) வீணா கானத்தைக் கேட்டிண்டிருக்கியே....!' என்று தான் பிரும்மாவை வீழ்த்தியதாம்!

ஜெர்மன் அறிஞர் மாக்ஸ் முல்லர் கூட நரசிம்ம அவதாரத்தை An Electrical Phenomenon என்றுதான் விவரிக்கிறார்.

நரசிம்மனின் தேஜஸ் எங்கே இருக்கு என்று கேட்டால், காயத்ரி மந்திரத்துக்குள்ளே இருக்கு!

ஒளியாய் இருக்கக் கூடியவன் நரசிம்மன் ஆனதாலே அந்த மந்திரத்தை விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் முதலிலே உள்ளடக்கியிருக்கிறது. அந்த அவதாரத்தின் பெருமையும் சஹஸ்ரநாம தொடக்கத்தில் இடம் பெற்றிருக்கிறது.

பிரணவத்தோடு ஆரம்பித்து 'விச்வம்' என்று முதல் நாமாவை விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் சொல்கிறோம்.

விச்வம் என்கிற சப்தம் என்ன?... அது ஒரு நாமம்,

# யொன்றுமில்லை

ஒரு பதம் மட்டுமில்லை...

வேதத்திலே வரும் பொருள் அது. பகவானே விச்வம் என்று சொல்வதாக ஆகிறது.

விச்வம் என்றால் பிரபஞ்சம். நாம் பார்க்கிற உலகம் பார்க்கப்படுவதால்தான் அதற்கு 'லோகம்' என்று பெயர்.

உபநிஷத் சொல்கிறது : காரணமாகிய பரப்ருஹ்மத்தை நாம் உணர வேண்டும்.

எதைக் கொண்டு பரப்ருஹ்மத்தைத் தெரிந்து கொள்வதாம்....?

சாஸ்திரத்தைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம்.

சாஸ்திரமாகிய உபநிஷத், 'காரணமாகிய பரப்ருஹ்மத்தைத் தெரிந்து கொள்ள காரியமாகிய பிரபஞ்சத்தைப் பார்' என்கிறது.

எதனிடத்திலிருந்து பிரபஞ்ச வஸ்துக்கள் எல்லாம் உண்டாயிற்றோ, எதனால் அவை

"அந்த சீட்டு கம்பெனி நடத்தின ஏலத்துல எனக்கும் இன்னொரு ஆசாமிக்கும் கடுமையான போட்டி!"

"அடடே! அப்புறம் யார் ஜெயிச்சீங்க?"

"நான் விடுவேனா? அம்பதாயிரம் ரூபாய் சீட்டை அறுபதாயிரம் ரூபாய் தள்ளி எடுத்தேன்!"

— பாஸு



ரக்ஷிக்கப்படுகிறதோ, எதனிடத்தில் அவை லயமடைகிறதோ... அதுவே இதற்குக் காரணம் என்று பரப்ருஹ்மத்தைக் குறித்துச் சொல்லப்படுகிறது.

காரணம், காரியம் இரண்டும் ஒன்றே! பரமாத்மா ஒருவன். ஒருவனே பலவாகி நிற்கிறான். பலவும் அவன்தான்; ஒன்றும் அவன்தான்!

விச்வம் என்பதற்கு இதுவே பொருள்.

**வி**ஷ்ணு சஹஸ்ரநாமத்திலே ரொம்ப முக்கியமான பகுதி எது என்று சிலர் கேட்கலாம்.

இப்படிக் கேட்டால் கீதை பாராயணம் பண்ண முயன்ற ஒருவருடைய கதை ஞாபகம் வருகிறது.

பகவத் கீதை கற்றுக் கொள்ளப் போன சிஷ்யர், குருவிடம், 'எந்தப் பகுதி முக்கியம்?' என்று கேட்டாராம்.

"முதல்லேருந்து பதினேழு அத்தியாயங்களை விட்டுவிடு; பதினெட்டை மட்டும் விடாதே. அது மோக்ஷ சன்னியாச யோகம் அதைத் தெரிஞ்சுண்டா போதும்" என்றார் குரு.

பதினெட்டைப் புரட்டிப் பார்த்தவர், "அதிலே ஏகமா ச்லோகம் இருக்கே.... எந்தெந்த ச்லோகம் முக்கியமோ அதை மட்டும் குறிச்சுக் குடுங்களேன்..." என்றார்.

"பதினெட்டிலே முன்னேயும் பின்னேயும் விட்டுவிடு.... இரண்டு ச்லோகம் மட்டுமே மனனம் பண்ணு" என்று எளிமைப் படுத்தினாராம் குரு.

சளைக்காத சிடர், இரண்டிலே ஏதாவது ஒன்று மட்டும் சொல்லுங்களேன்..." என்று கேட்க.

'ஸர்வ தர்மான்....' என்று தொடங்குகிற ச்லோகத்தைக் குறிப்பிட்டு சொன்னார் குரு.

"அதிலேயும் முக்கியமான சொற்களை மட்டும் சொல்லுங்களேன், எல்லாவற்றையும் மனனம் செய்வது கஷ்டம்" என்று சிஷ்யர் சலித்துக் கொள்ள,

கடைசியில், "நீ எதை விட்டாலும் விடு.... 'மா சுச:' என்கிறதை மட்டும் விட்டுடாதே என்றாராம் குரு.

'மா சுச:' - இதுதான் பகவத் கீதையின் சாரம். ஸ்ரீ பகவானுவாசா மா சுச: -பகவான் சொன்னான்: 'கவலைப்படாதே!'

நாம் எப்படியிருந்தால் கவலைப்படாமலிருக்கலாம் என்று பகவான் சொன்னான்....?

அவன் சொன்னபடி நடந்தால் கவலைப் படாமல் இருக்கலாம் என்றான்.

'எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அவன் சொன்னான்...?' என மீண்டும் கேட்டால், அதற்கு கீதையின் முதல் அத்தியாயத்துக்குத்தான் திரும்பவும் போக வேண்டும்...!

**ஸ்ரீ** பகவானுவாசா மா சுச: என்பதை கீதையின் சாரமாகச் சொன்னது போல, விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் சாரமாக எதைச் சொல்லலாம்...?

நித்தியம் சஹஸ்ரநாமம் பாராயணம் பண்ணுகிற ஒருவர், ஒரு திடீர் அவசரத்தின் போது, நேரமில்லாமல் போனால் சுலபமாகச் சொல்லி முடிக்க வழி இருக்கிறதா?

இதை அன்றைக்கே பார்வதி, பரமசிவனிடம் கேட்டுவிட்டாள்.

"ஆயிரம் திருநாமங்களை இலகுவான உபாயத்திலே சொல்வதற்கு வழி உண்டா....?"

அதற்கு ஈச்வரன் அழகாக பதில் சொல்கிறார் :

ஈச்வரோ வாசா

ஸ்ரீ ராம ராம ராமேதி

ரமே ராமே மனோரமே
சஹஸ்ரநாம தத்துல்யம்
ராம நாம வரானனே....

'வரானனே' - 'அழகான திருமுக மண்டலம் கொண்டவளே' என்று பார்வதியைக் கொண்டாடுகிறார் பரமசிவன்.

"ராமா, ராமா, ராமா! என்று மூன்று தடவை சொன்னால், சஹஸ்ரநாமத்துக்கு அது துல்ய மானது" என்கிறார்.

அதற்காக நித்யமே நாம் 'ஸ்ரீ ராம ராம ராம' என்று சொல்லிடலாம்னு வைத்துக் கொள்ளக்கூடாது. நித்யம் சஹஸ்ரநாம பாராயணம் பண்ணணும். அது அபூர்வமாக முடியாமல் போகிற தினத்தில் 'மூன்று முறை ராம நாமா சொன்னால் போதும்' என்று ஈசுவரனே பேசுகிறார்.

மூன்று முறை சொல்வது நூறு நாமங்களுக்கு எப்படி ஈடாகும்...?

திருமழிசையாழ்வார் திருச்சந்த விருத்தத்திலே, எண்ணில் அடங்கியுள்ள தத்துவத்தை எடுத்துச் சொல்கிறார்.

வேத சமக மந்திரமும் எண்ணிக்கையைக் கொண்டாடுகிறது.

'ராம' என்ற சொல்லை எடுத்துக் கொண்டோமானால், 'ர' வர்க்கத்திலே 'ரா' என்பது இரண்டாவது எழுத்து. ம என்பது ஐந்தாவது எழுத்து (வடமொழியின் ப ப ப ப ம வரிசை). இரண்டை ஐந்தால் பெருக்கினால் கிடைப்பது பத்து.

ஆக 'ராம' என்ற ஒரு சொல்லுக்குரிய எண் 10. ராம, ராம, ராம என்று மும்முறைகள் சொன்னால், அதற்குரிய எண் 10 X 10 X 10 அதாவது ஆயிரம்!

ஆக, ராம, ராம, ராம என்று மும்முறை சொல்வது ஆயிரம் திருநாமங்களுக்கு துல்யமானதுதானே...!

ராமநாமத்தின் மகிமையை கம்பன் வாலி வதைப் படலத்திலே சொல்கிறான். ராமனின் அம்பில் அவன் நாமத்தை வாலி கண்டதை விவரிக்கிறான். :

மும்மைசால் உலகுக்கெல்லாம்
மூலமந்திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப் பெரும் பதத்தை, தானே
இம்மையே, எழுமை நோய்க்கும்
மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமம் தன்னை
கண்களில் தெரியக் கண்டான்

இதனினும் உயர்வு ஒரு நாமத் துக்கு என்ன ருக்க முடியும், சொல்லுங்கள்...?

(தொடரும்)

# கட் பண்ணி ஒட்ட சில வோட்டு விவரம்!

**நடந்து முடிந்த சட்டமன்றத் தேர்தலில் 167 உறுப்பினர்களைக் கொண்ட தி.மு.கழகத்தில் அதிக வாக்கு வித்தியாசத்தில் வென்றவர், தாம்பரம் வைத்தியலிங்கம். வாக்குவித்தியாசம் - 1,13,942. குறைந்த வாக்கு வித்தியாசத்தில் வென்றவர் விளாத்திகுளம் ரவிசங்கர். வாக்கு வித்தியாசம் - 634.**

**●○ 39 உறுப்பினர்களைக் கொண்ட த.மா. காங்கிரஸில் அதிக வாக்கு வித்தியாசத்தில் வென்றவர், வில்லிவாக்கம் ஆருண். வாக்கு வித்தியாசம் - 1, 47,747. (96 சட்டமன்ற தேர்தலில் அதிக வாக்கு வித்தியாசத்தில் வென்றவர் இவர்தான்.) குறைந்த வாக்கு வித்தியாசத்தில் வென்றவர், வாசுதேவநல்லூர் ஈஸ்வரன். வாக்கு வித்தியாசம் - 616.**

**●○ நான்கு உறுப்பினர்களைக் கொண்ட அ.தி.மு.கவில், அதிக வாக்கு வித்தியாசத்தில் வென்றவர் அறந்தாங்கி திருநாவுக்கரசு. வாக்கு வித்தியாசம் - 14,237. குறைந்த வாக்கு வித்தியாசத்தில் வென்றவர் ராசிபுரம் பி.ஆர். சுந்தரம். வாக்கு வித்தியாசம் - 454.**

**●○ நான்கு உறுப்பினர்களைக் கொண்ட பா.ம.க.வில் அதிக வாக்கு வித்தியாசத்தில் வென்றவர், தாரமங்கலம் கோவிந்தன். வாக்கு வித்தியாசம் - 24,707. குறைந்த வாக்கு வித்தியாசத்தில் வென்றவர், பெண்ணாகரம் மணி. வாக்கு வித்தியாசம் - 406 (96 சட்டமன்றத் தேர்தலில் மிக குறைந்த வாக்கு வித்தியாசத்தில் வென்றவர் இவர்தாம்.)**

**●○ எட்டு உறுப்பினர்களைக் கொண்ட வ.கம்யூனிஸ்ட் கட்சியில் அதிக வாக்கு வித்தியாசத்தில் வென்றவர், திருத்துறைப்பூண்டி பழனிச்சாமி. வாக்கு வித்தியாசம் - 53,688. குறைந்த வாக்கு வித்தியாசத்தில் வென்றவர், நாங்குநேரி கிருஷ்ணன். வாக்கு வித்தியாசம் - 3,149.**

— எம்.எஸ். குமார்.

மிசிஸ். பொன்சேகா கிளம்பிப் போய்ப் பத்து நிமிடம் கழித்து டெலிபோன் கூப்பிட்டது.

'ஆட்டோ- ஆன்சரிங்'கை இணைக்க மறந்திருக்கிறாள். "இது சாய்வாலா கம்பெனி- எங்கள் வைஸ் பிரசிடெண்ட் ரங்கா தற்போது இங்கே இல்லை. நாளைக் காலையில் அவர் காரியதரிசியைச் சந்தியுங்கள். சிரமத்துக்கு மன்னிக்கவும்"- பொன்சேகா குரலில் பதிவு செய்து வைத்ததைக் கிரமமாகச் சொல்லும் இயந்திரம் அது.

ரங்கா, அறைக்கு வெளியே வந்து ரிசீவரை எடுத்தார்.

"ஹலோ நான் எகனாமிக்ஸ் நியூஸ் பத்திரிகையின் உதவி ஆசிரியர் ராகவ்ஷெட்டி-"

"சொல்லுங்கள்."

"குட் ஈவினிங் சார்.. உங்கள் கம்பெனி பாரத் ஆர்ச்சர் நிறுவனத்தோடு இணையப் போவதாகப் பரபரப்பான செய்திகள்... இந்த மெகா இணைப்பு பற்றி..."

ரங்கா இடை மறித்தார்.

"இல்லை... எனக்குப் பேச நேரம் இல்லை."

"செய்தி உண்மையா என்று மட்டும்."

"பாரத் ஆர்ச்சர் காரர்களையே கேட்டுப் பார்க்க வேண்டியதுதானே..."

ஓங்கி அறைவதுபோல ரிசீவரை வைத்தார்.

பொன்சேகாவின் பர்சனல் கம்ப்யூட்டர் திரை இன்னும் ஒளிர்ந்து கொண்டு தான் இருந்தது. அவள் போகும்போது ரெக்சின் கவர் போர்த்தி, கீ போர்டைப் பூட்டி விட்டுப் போகிற பழக்கம்.

மறதியில்லை. இந்த வேலை இனியும் நிலைக்குமா என்ற சஞ்சலம்.. அதனால் வரும் அசிரத்தை. எல்லோரையும் போலவே.

பக்கத்து அலமாரியில் ரெக்சின் உறையைத் தேடி எடுத்தபோது, அடுத்தடுத்துத் தனக்கு வாய்த்த காரியதரிசிகளை நினைத்துக் கொண்டார் ரங்கா.

# டேக் ஓவர்

பெண்கள். கீழ்ப்படிதல் உள்ளவர்கள். குறிப்பறிந்து செயல்படுபவர்கள்.

புள்ளி விவரங்களை விரல் நுனியில் வைத்திருந்த ஆஷா மேனேன். அவள் இப்போது புனே சிஞ்ச்வாட் யூனிட்டில் அக்கவுண்ட் மானேஜர். முணுமுணுப்பாக உதடு அசைவதைக் கூடக் கவனித்துப் பிழையே இல்லாமல் சுருக்கெழுத்தில் வார்த்து அடித்து வந்து நீட்டுகிற அருணா காமத்... கார் விபத்தில் இறந்து போனாள். அழகான உச்சரிப்போடு ஆங்கிலம் பேசும், தெலுங்கில் கவிதை எழுதுகிற மாலினி சாஸ்திரி, டெலிவிஷன் அறிவிப்பாளராகி விட்டாள். எல்லோருக்கும் முன்னால் வந்த கல்யாணி.. ரங்கா முன்னால் உட்காரக் கூடப் பயப்படுவாள். ஏன் என்பதற்கு முன் எண்ணெய்யாக, எல்லாம் பார்த்துப் பார்த்துச் செய்தவள் கல்யாணத்துக்கு அப்புறம் வேலையை விட்டு விட்டாள் கல்யாணி.

ரங்காதான் அவளைக் கல்யாணம் செய்து கொண்டது.

கல்யாணத்துக்கு அப்புறமும் அவள் ரங்காவுக்கு 'உங்கள் கீழ்ப் படிதலுள்ள கல்யாணி'தான்.

"வீட்டுலே அடைஞ்சு கிடந்தா சோம்பேறியாயிடுவே... ஈவினிங் காலேஜில் எம்.ஏ.படி". படித்தாள். "பெண் குழந்தை தானா... பரவாயில்லே... இது ஒண்ணே போதும்.. நீயே ஆபரேஷன் செஞ்சுக்க." செய்து கொண்டாள். "சுதாக்குட்டி பள்ளிக்கூடம் போனப்புறம் சும்மாப் பகல்லே தூங்

**இரா. முருகன்**

கிட்டுக் கெடக்கியே... எம்.ஏ. பர்ஸட் கிளாஸ் சர்ட்டிபிகேட் ஊறுகாய் போடவா வாங்கி வச்சே... பேப்பர்லே பார்த்து அப்ளை பண்ணு..." வேலைக்குப் போனாள். "புரமோஷன்லாம் சரிதான். ஆனா சாயந்திரம் ஆறு மணிக்கு அப்புறம் உக்கார வேண்டாம்." அடித்துப் பிடித்து ஆறு மணிக்கு வந்தாள். "சமையலுக்கு எதுக்கு ஆள் போடணும்?" போடவில்லை. ரங்கா வீட்டுக்குப் போகும் போது சுடச் சுட ரசமும் பொரியலும் சுக்கா ரொட்டியும் தயாராக இருக்கும்.

பசிக்க ஆரம்பித்தது. எம்.டி. லண்டனிலிருந்து கூப்பிடுவதாக சொல்லியிருக்கா

விட்டால் கிளம்பிப் போயிருக்கலாம். ரங்கா தான் வேண்டுமாம். கம்பெனிக்காக வரிசையாக புது உற்பத்திப் பொருள்கள் அறிமுகப்படுத்திய கைதான், கம்பெனியை பாரத்-ஆர்ச்சரில் மெகா இணைப்பு செய்ய முன்கை எடுக்க வேண்டுமாம்... விதி...

"சுநில்"

இன்டர்காமில் அக்கவுண்ட்ஸ் மானேஜரைக் கூப்பிட்டார்.

"பிராபிட் ஏர்னிங் கப்பாசிட்டி வேல்யு கம்ப்யூட் பண்ணியாச்சா சுநில்?"

"இல்லே ரங்கா...நாளைக்கு நான்தான் பண்ணனும். பசங்க வரிசையா கால்கடுதாசி நீட்டிட்டாங்க. உனக்குத்தான் தெரியுமே.. கப்பல் முழுகிட்டு இருக்கு.. கிழட்டு மாலுமி நீயும் நானும் நம்ப வயசுக்காரங்களும்தான். பாரத் ஆர்ச்சர்லே நம்மை எப்படி மதிப்பாங்களோ..."

ஏர் கண்டிஷனரின் சில்லிப்பு அதிகமாக இருந்தது. மணி நேரத்துக்கு ஒரு முறை சுற்றி வந்து சரிபார்க்கும் ஆப்பரேட்டரை இன்டர்காமில் கூப்பிடப் பதிலே இல்லை.

ஏ.சி.யைக் குறைக்கச் சொல்ல வேண்டும். ரங்கா வெளியே வந்து லிப்ட்டிற்குக் காத்திராமல் மாடிப்படி இறங்கினார். ஏசி ரூம் கீழ்த் தளத்தில்.

மாடிப்படியை ஒட்டி வளைந்து போகும் கைப்பிடி ரெய்லிங்களில் படிந்த தூசி கண்ணை உறுத்தியது. துடைத்துத் துடைத்துப் பாலீஷ் போட்டதுபோல வைக்கப்படும்



கட்டடம் இது.

நூறு வருடம் பாரம்பரியம் உள்ள கம்பெனி. டீத்தூள் விற்றுக் கட்டிய பிரம்மாண்டமான தலைமை அலுவலகம். நூறு வருடமாக அதே பேக்கிங்கில் வரும் கேத்தி டீ இன்னும் நாடு முழுவதும் விற்பனையில் நம்பர் ஒன் தான். டீத்தூள் தவிர இன்ஸ்டெண்ட் காப்பி, மில்க் சாக்லெட், சமையல் எண்ணெய் என்று நூற்றுக் கணக்கில் உற்பத்திப் பொருள்கள்.

"இருபத்தேழு சதவிகிதம் மொத்த விற்பனை அதிகரிப்பு. வருடாந்திர வளர்ச்சி பதினெட்டு சதவிகிதம். ஏகப்பட்ட லாபம். வேறு தொழில்களில் முதலீடு செய்யலாம். லெட் அஸ் டைவர்ஸிபை.. தய்வானிலிருந்து டி.வி. பிக்சர் டியூப்களை சோர்ஸ் செய்வதில் ஆரம்பிக்கலாம். அப்புறம் செயற்கை இழை... எரிசாராயம்..."

எந்த தேவதை கொடுத்த சாபமோ... அப்புறம் கம்பெனி இறங்கு முகம்தான், கடந்து போன ஐந்து வருடமாக.

முதல் மாடியில் போர்ட்ரூம் கதவு விரியத் திறந்து கிடந்தது. கூட்டம் நடக்காத நாட்களில் பூட்டி வைத்திருக்கும் இடம் இது.

ரங்கா உள்ளே நுழைந்து ஒவ்வொரு விளக்காகப் போட, நீள்வட்ட மேஜையும், குஷன் நாற்காலிகளும், எல்.சி.டி. புரஜக்டரும், எதிரே சுவரில் கரும்பலகையும் வெள்ளைத் திரையுமாக விரியும் போர்ட்ரூம்.

புதியதாக விற்பனைக்கு வரப்போகும் எத்தனை பண்டங்களுக்கு இங்கே பிராடக்ட் பிரசென்டேஷன் கொடுத்திருக்கிறார் ரங்கா. ஏலக்காய் வாடை தேயிலை, ஸ்வீடிஷ் ஸ்பான்ச் கேக், பாலாடைக் கட்டி என்று எத்தனை பரபரப்பான அறிமுகச் சடங்குகள்.

விற்பனைக்கு வரும் பண்டத்தின் நிறம், வடிவம், சுவையிலிருந்து அது சுற்றி வரும் காகிதம், மேலே வண்ணங்கள், எழுத்து, விற்பனையுத்தி, விளம்பரம் என்று சகலமானதையும் அணுஅணுவாகத் திட்டமிட்டுச் செய்கிற பிராடக்ட் லான்ச் ஒவ்வொன்றும் ஒரு வருடம் முதல் இரண்டு வருடம் வரை நீளும்.

போர்ட்ரூம் சுவரில் 'வாட்-கம்'மின் வண்ண போஸ்டர் கண்ணைச் சிமிட்டியது. சாய்வாலா கம்பெனியின் வெற்றிகரமான பிராடக்டுகளில் அதுவும் ஒன்று. சுதா கல்லூரியில் சேர்ந்த வருடம் தான் விற்பனைக்கு வந்தது. சுதா கொடுத்த ஐடியா...

"டாடி, காலேஜ் தோழிகள் எல்லாம் ஊட்டி, கொடைக்கானல்னு லீவுக்குப் போறாங்க..."

"நீ என்னோட டெல்லிக்கு வா... மூணு நாள் பிளானிங் கான்பரன்ஸ்... முடிஞ்சு ஊர் சுத்திக் காட்டறேன்..."

"இந்த வெய்யில்லே டெல்லிக்கு உங்களோட வர்றதை விட, நெட்டூர் கிராமத்துலே பாட்டியோட உக்காந்து மொட்டை மாடியிலே வடாம் பிழிவேன்..."

டென்னிஸ் ராக்கெட்டோடு சுதா கிளம்பியபோது ரங்கா மனம் முழுதும் ஜவ்வரசி வடகம் ஆக்கிரமித்துக் கொண்டது.

அதற்கு மூன்று மாதம் முன்னால்தான் லக்னோ பிரிவில் படு உற்சாகமாக சோயா-சேமியாவை அறிமுகப்படுத்தினார்கள். சேமியாவுக்கான மார்க்கெட் ஏற்கெனவே நிறைந்து வழிகிற சூழ்நிலையில், இது வேண்டவே வேண்டாம் என்று ரங்கா படித்துப் படித்துச் சொல்லியும் பலன் இல்லை. லக்னோ நாராயணந்தத் எம்.டி.யின் தங்கை மகன்.

லட்சக் கணக்கில் பணம் செலவு செய்து, இயந்திரம் வாங்கி, கலர் கலராகச் சாயம் தோய்த்து– "குழந்தைகளுக்குப் பிடிக்கும்"– இந்தி சினிமா காமெடியனை வாழைப் பழத்தோலில் வழுக்கி விழ வைத்து, மகா காமெடி விளம்பரப்படம் எடுத்து, வியாபாரத்துக்குக் கொண்டு போனபோது படுதோல்வி.

சோயா மொச்சை வாடை பிடிக்காதவர்களிடம் புரதச் சத்து, ஊட்டச் சத்து, விட்டமின் கணக்கையும், குறைந்த விலையையும் காட்டிப் புண்ணியமில்லை என்று கம்பெனிக்கு உறைப்பதற்குள் பெட்டி பெட்டியாகத் திரும்பி வந்த சோயா-சேமியா...

சோயா சேமியாவை மறு அறிமுகம் செய்கிற காரியம் ரங்கா தலையில்தான் விழுந்தது. ஏழு லட்ச ரூபாய் செலவில் திட்டமிட்ட ரீலான்ச் அது. வழிவகை யோசித்துக் கொண்டிருந்த போதுதான் சுதா சொன்ன வடகம்.

குவிந்து கிடக்கும் சோயா சேமியாவைக் கொட்டிக் கலந்து தோதாக வேறு சரக்கும் சேர்த்து உப்பு உறைப்பாக யந்திரத்தில் வடகம் செய்து விற்றால்... மறுநாளே 'வாட்-கம்' பெயர் பிறந்தது... வைத்தது சுதாதான். ஆறே மாதத்தில் மார்க்கெட்டுக்கு வந்த வாட்-கம் விற்பனை சூடு பிடித்தபோதுதான் ரங்கா வைஸ்-பிரசிடெண்ட் ஆனது.

எம்.சி.ஏ. முடித்து நியூரல் நெட் ஒர்க்கிங்கில் பிஎச்.டிக்காகச் சுதா கலிபோர்னியா போனதும் வாட்-கம் அங்கேயும் சூப்பர் மார்க்கெட்டுக்களில் தலைகாட்டியிருப்பதாக எழுதியிருந்தாள்.

"பாக்கேஜில் மட்டும் ஏழெட்டு வர்ணத்தில் அடிக்கிறதுபோல இல்லாமல் சாப்ட்டாக இருந்தால் அமெரிக்கர்களும் வாங்கலாம்" என்று யோசனை வேறு சொல்லியிருந்தாள்.

பிளாஸ்டிக் டப்பாவிலும், கண்ணாடி பாட்டிலிலும் கூட அழகாக பிரிண்ட் செய்யும்'தெர் இமேஜ்' இயந்திரம் வாங்கிய போதுதான் சுதாவின் காஷுவலான கடிதம்.

அவள் வேலை பார்க்க ஆரம்பித்திருந்த நேரம் அது. கூட வேலை செய்யும் அமெரிக்கக் கறுப்பனான ராபர்ட்டைக் கல்யாணம் செய்து கொள்ள அப்பா அம்மா சம்மதம்

# ‘ஆன்லைனில்’ டெபாசிட் செய்ய சென்றதுண்டா?

## கட்டாயம் செல்ல வேண்டும்.



ஏனெனில், உங்கள் சௌகரியத்திற்கு ஏற்ற வண்ணம் டெபாசிட் முறைகள், காலந்தவறாவட்டி, ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட சேவை. கைதேர்ந்த நேர்த்தியான தொழில்முறை .... இப்படி எத்தனையோ இருந்தும் இதில் மிக முக்கியமாக கவனிக்கப்பட வேண்டியது ஆன்லைனின் **“கேர்-‘ஏ’ (FD)”** ரேட்டிங் - உங்கள் டெபாசிட்டுக்கு அதிக பாதுகாப்பு.




இவையனைத்தும் RBI-ன் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டது. அடடா!

கவலை பறந்தோடி விட்டது பார்த்தீர்களா?



**அதனால்தான் அமெரிக்கா, சிங்கப்பூர் மற்றும் அரபு நாடுகளிலுள்ள பெரும்பாலான NRIs ‘ஆன்லைனில்’ நம்பி டெபாசிட் செய்திருக்கிறார்கள்.**

தொலைபேசியைக் கையில் எடுங்கள் அல்லது ஃபேக்ஸ் செய்யுங்கள். மற்ற விவரங்கள் அனைத்தும் உங்கள் வீட்டின் வாயிற்படியில்!



தனிப்பட்ட இந்த சேவை ஒன்றே போதும். ஆன்லைனை நீங்கள் மற்றவர்களிடம் சிபாரிசு செய்திட! இப்பொழுதே ஆன்லைனுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

**CARE 'A' RATING**




**ஆன்லைன் ஃபைனான்சியல் சர்வீசஸ் லிமிடெட்**

248, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.
தொ.பே.: 8276768 / 8265301 / 8234072. ஃபேக்ஸ்: 8267008.

இந்த விளம்பரம் இந்து நாளிதழில் 29.1.96 அன்று வெளிவந்த சட்ட பூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சியே. இந்த விளம்பர வாசகம் டெபாசிட் விண்ணப்பப்படிவத்திலும் அச்சிடப்பட்டுள்ளது. டெபாசிட் செய்வதற்கு முன் இதை கவனத்தில் கொள்ளவும்.







தேவையாம்...

ரங்கா போன் செய்யவில்லை. பதிலும் போடவில்லை. கல்யாணிக்கும் உடனடி தடை உத்தரவு.

"மகளைச் செல்லம் கொடுத்து வளர்த்துட்டேங்க... என்னை மாதிரி நில்லுன்னா நிக்கணும் உட்காருன்னா உக்காரணும்னு எதிர்பார்க்க முடியுமா?"

யார் ஆசியும் இல்லாமல் சுதா கல்யாணம் முடிந்து இரண்டு வருடம் ஓடிவிட்டது.

நேற்றையும், முந்தாநாளையும் முந்தின நாட்களையும் அசைபோட்டுக் கொண்டு ரங்கா படி இறங்கிவர, ஏ.சி. அறை வாசலில் ஆப்பரேட்டரும் இன்னும் இரண்டு கடைநிலை சிப்பந்திகளும் உரக்கப் பேசிக் கொண்டிருந்தது காதில் அறைந்தது.

"ஆர்ச்சர் கம்பெனியிலே சேர்ந்த பிறகு இந்தக் கட்டடத்தை வித்துடுவாங்களாம். பி.எப்., கிராஜுவிட்டி, மேலே ரெண்டு மாச சம்பளம் போட்டுக் கொடுத்து நம்மளை மாதிரி ஆசாமிங்களை எல்லாம் வீட்டுக்கு அனுப்பிட்டு, முக்கியமானவங்களை மட்டும் அங்கே சேர்த்துப்பாங்களாம். நம்ப வைஸ் பிரசிடெண்ட் ரங்கா சார்... பாண்டே மாதிரி... அவங்களும் அங்கே அதிகாரம் பண்ண முடியாது... டையைக் கட்டிக்கிட்டு, கையைக் கட்டிக்கிட்டு நிக்கணும்... காலம்டா சாமி..."

திரும்ப மாடிப்படி ஏறும்போது ரங்காவுக்கு வியர்த்திருந்தது.

வயதாகி விட்டது. வேறு எங்கேயும் வேலைக்குப் போக முடியாது. பல்லைக் கடித்துக் கொண்டு இன்னும் இரண்டு வருடம் தள்ளி விட்டால் ரிடையராகி விடலாம். அது வரைக்கும் எந்தப் பேர்வழிக்கு சலாம் போட்டு "எஸ் சார்" சொல்ல வேண்டும் என்று தலையில் எழுதியிருக்கிறதோ...

ரங்கா அறையில் டெலிபோன் தொடர்ந்து அலறிக் கொண்டிருந்தது.

எம்.டி.தான்.

"எங்கேப்பா போனே... அப்போலேருந்து கூப்பிடறேனே.. நீ அனுப்பின பேக்ஸ் வந்தது... ஸ்வாட் அனைலசிஸ்லே நம்ம பிராடக்ட்களோட டோமாவை ஸ்ட்ரெங்த்தாகக் காட்டணும். நெட் அசட் வேல்யு ரீடு பண்ணலாம்... பம்பாய் எக்சேஞ்ச் ஷேர் வேல்யுதான் எடுத்துக்கணும் மார்க்கெட் மதிப்பு கணக்குப்போட... எல்லாம் சரி பண்ணி நாளைக்கு நீ ஆர்ச்சர் லோக்கல் ஆபீஸிலே போய் டிஸ்கஸ் செய்யணும். ஷேர் எக்ஸ்சேஞ்ச் வேல்யு கம்ப்யூட் ஆகி ஏத்துக்கிட்டாத்தான் மெர்ஜர் வேலை ஆரம்பிக்கும். நாளைக்கு மத்தியானம் ஆர்ச்சர்லே போய்ப் பேசிடு... சரியா... என்ன செய்ய.. நாம்




''அடிதடியில்லை, சித்திரவதையில்லை, கொலை கிடையாது, கற்பழிப்பு கிடையாது... இந்த வேலையை விட்டுட்டு சாமியாரா ஆயிடலாம்னு பார்க்கறேன்...''



''அவ்வளவு சுலபமா விட்டுடுவேனா...? சட்டசபைத் தேர்தல், மாநகராட்சித் தேர்தல், பஞ்சாயத்துத் தேர்தல், கூட்டுறவுத் தேர்தல்னு எல்லாத்துலயும் நின்னு ஏதாவது ஒண்ணுலயாவது ஜெயிச்சுட மாட்டேன்...?''

— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்

பணர்ருக பீபாற காலம் இது...''

பேசிக் கொண்டே போகிற எம்.டி... ரங்கா கை கட்டி நிற்க வேளை நெருங்கிக் கொண்டிருக்கிறது.

ஆயாசத்தோடு எல்லாக் காகிதங்களையும் பெட்டியில் திணித்துக் கொண்டு கிளம்பும் போது திரும்பவும் தொலைபேசி.

இந்த சனியனிலிருந்து எப்போதுதான் விடுதலை...

''கிளம்பலியா இன்னும்?''

கல்யாணிதான்.

''எங்கே தொலையப்போறேன். வந்துட்டுத் தானே இருக்கேன். என்ன விஷயம் சொல்லு...'' எரிச்சல் எட்டிப் பார்க்கும் குரல்.

''வந்து... இப்பதான் சுதா போன் பண்ணினா..''

கோபம் மெல்ல ஏறிக் கொண்டிருந்தது ரங்காவுக்கு.

''அவ உண்டாயிருக்காளாம்...'' தயங்கித் தயங்கி கல்யாணி சொன்னாள்.

''போ... போய்ப் பிரசவம் பாத்துட்டு வா... மாப்பிள்ளைக் கருப்பனுக்கும் சேர்த்து சிசுருஷை பண்ணி பைஜாமா தோய்ச்சுப் போடு போ... என்ன எழவுக்கு என்னைக் கேட்கணும்... என் கிட்டேச் சொல்லித் தொலைக்கணும்...''

கோபம்... மெகா மெர்ஜர் மீது. சாய்வாலா கம்பெனி மீது. எடுத்துக் கொள்ளும் பாரத ஆர்ச்சர் மீது. ஐந்து வருஷமாக நஷ்டக் கணக்குக்கு வாய்க்கால் வெட்டிய எல்லாப் பயல்கள் மீதும்... நாளைக்கு யார் முன்னாலோ கை கட்டி நிற்க வேண்டிய தலையெழுத்தின் மீது... அந்த முகம் தெரியாத அற்பப் பிறவி மீது... கல்யாணியின் பேச்சின் மீது...

''சரி... உங்களுக்குப் பிடிக்கலைன்னா பேசலை...''

''பிடிச்சதாப் பேசு...'' உறுமல் தொடர்ந்தது.

''உங்களுக்குப் பிடிச்ச சுண்ட வத்தக் குழம்பும், வெள்ளரிப் பச்சடியும் செஞ்சு வச்சிருக்கேன். எனக்குப் பசிக்கலை.. தலைவலி உசிரு போறது..''

''நாளைக்கு லீவு போட்டு ரெஸ்ட் எடு... சரியாயிடும்...'' இறுக்கம் குறையாத குரலில் சொன்னார் ரங்கா.

''எங்கே லீவு போட... நாளைக்கு உங்க கம்பெனியிலேருந்து யாரோ மெர்ஜர் பத்திப் பேச வராங்களாம்... இனிமே அது சம்பந்தப் பட்ட சகலமானதையும் என்னைத் தான் பார்த்துக்கச் சொல்லியிருக்காங்க.... ஐயாம் ஸோ டயர்ட்... கொஞ்சம் சீக்கிரமா வந்துடறீங்களா?''

''எஸ் மேடம்...''

ரங்கா ரிசீவரை ஜாக்கிரதையாக வைத்தார்.



• ஷர்மிலா

# அட்மிஷனா? ஈஸியா? யார் சொன்னது?



• கணேசன்



• வினோதினி

19.5.96 இதழில் அந்தக் கால அட்மிஷன் பற்றிச் சில 'பெரியவர்கள்' பகிர்ந்து கொண்டாலும் கொண்டார்கள்.... இந்தக் கால இளைஞர்கள் நம்மைப் பிலு பிலுவெனப் பிடித்து உலுக்கி விட்டார்கள். "ஏன் சார், இன்று சாத்தியமில்லாத விஷயங்களைச் சொல்லி வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறீர்கள்? எம்.எல்.ஏ சீட் கூட வாங்கி விடலாம்... காலேஜ் அட்மிஷன் குதிரைக் கொம்பு தெரியுமா?" என்று புலம்பித் தீர்த்து விட்டார்கள், கடிதங்களில்.

என்னவாம் கஷ்டம்? சிலரை விசாரித்தோம்:

**வினோதினி ராமச்சந்திரன்:**

**1983**ல் நான் இரண்டாம் வகுப்பில் சேர்வதற்கே (டி.ஏ.வி) இண்டர்வியூ இருந்தது. அப்போர்ஸ் அந்த வயசுக்குக் கேள்விகள் சுலபம்தான் என்றாலும் அட்மிஷன்களுக்கான யுத்தம் அப்போதே தொடங்கி விட்டது.

இஞ்சினியரிங் படிக்க ஆசைப்பட்டு, ப்ளஸ் டூவில் முதல் குரூப் எடுத்தேன். என்ட்ரன்ஸ் எழுத ஸ்பெஷல் கோச்சிங் எல்லாம் போனேன். ஆனாலும் கணக்கு பேப்பர் ரொம்பக் கஷ்டமாக இருந்தது. உதறல்தான்! அண்ணா, பி.எஸ்.ஜி, கிரஸண்ட் என்று எதிலாவது நுழைய இப்போது தவித்துக் கொண்டிருக்கிறேன். எதுவும் கிடைக்காவிட்டால் எத்திராஜ், எஸ்.ஐ.ஈ.டி, ஸ்டெல்லா என்று அலைய வேண்டும்.

சென்னையில் மட்டும் தனியார் உட்பட முப்பத்தைந்து இஞ்சினியரிங் கல்லூரிகள் உள்ளன. என்ட்ரன்ஸ் எழுதின எல்லோருக்கும் சீட் கிடைத்துவிடும்தான்- கையில் காசு இருந்தால்!

**டாக்டர் ஏ.எஸ்.கணேசன்:**

**வ**ருஷத்துக்கு 1400 பேர் மெடிகல் படிச்சுட்டு வெளியே வராங்க. ஆனா இதுக்கு முட்டி மோதற வங்க ஐம்பதாயிரத்துக்கும் மேலே!

பத்து வருஷம் முன்பு எம்.பி.பி.எஸ் முடிச்சா, யு.எஸ்.ஸுக்கு பிளேன் ஏறிடலாம். இப்ப டூரிஸ்ட் விசாகூடக் கிடைக்காது.

இன்னிக்கு எம்.பி.பி.எஸ். போறவே போறாது. எம்.எஸ்.முடிக் கணும். தவிர மேல மேல படிச்சிட்டே இருக்கணும். எம்.எஸ். மொத்தம் 300 சீட் தான். 1400 பேர்ல 300 சீட்டுக்குப் போட்டி! இதில் பாதி சர்வீஸ் கோட்டா. நான் எம்.பி.பி.எஸ் முடிச்சிட்டு எம்.எஸ்.சீட்டுக்காக நாலு வருஷம் காத்திருந்தேன்!

சுயநிதிக் கல்லூரிகளில் படிக்கறது வேஸ்ட். உபயோகமில்லை. செலவுதான் மிச்சம். யோசிச்சுப் பார்த்தா இப்ப டாக்டருக்குப் படிக்கறதுனால பெரிய லாபம் ஒண்ணு மில்லை. சீட் கிடைக்காட்டா குடி முழுகிப் போகாதுன்னுதான் சொல்லுவேன்.

**பேபி ஷர்மிலா ப்ரியா:**
*(பாப்பாவின் சார்பில் அப்பா);*

**ந**ல்ல ஸ்கூலில் சேர்க்க வேண்டுமென்றால் இப்போதெல்லாம் குழந்தை பிறந்ததுமே ஸ்கூலில் ரிஜஸ்தர் பண்ணி விட வேண்டும். ஜூன் '94ல் எங்கள் ஷர்மிலா பிறந்தாள். அக்டோபர் மாதம் நூறு ரூபாய் கட்டி 'சிஷ்யா'வில் பதிவு செய்துவிட்டேன். அவளுக்கு மூன்று வயதாகும்போது 'சிஷ்யா' விலிருந்து இண்டர்வியூக்குக் கூப்பிடுவார்கள். அவளுக்கு மட்டுமல்ல... பெற்றோருக்கும் தான்!

**-அசோக்**



தகவல் வரும் போது ஆறு மணி! சரியாக ஆறு மணி. எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. பலபலவென்று விடிந்து விட்டது. இங்கொன்றும் அங்கொன்றுமாய் விட்டு விட்டுக் கோழி கூவிக் கொண்டிருந்தது. தெருவில் நடமாட்டம் கூடியது. வேப்பமரத்தில் பறவைகளின் சலசலப்பு!

என்றைக்கும் இல்லாமல் அன்றைக்கு அம்மா அழகான கோலம் போட்டிருந்தாள். பதினெட்டுப் புள்ளி, இருபது வரிசையில் தேர் கோலம். தெருவை அடைத்துத் தேர் நின்றிருந்தது. எப்போதும் அம்மா ஒரு தாமரைப் பூ தான் போடுவாள். இல்லையென்றால் சின்னதாய் ஒரு நெளி கோலம். அன்றைக்கென்று ஏன்தான் இவ்வளவு பெரிசா தேர்க் கோலம் போடத் தோன்றியதோ?

நான் திண்ணையில் குத்திட்டு அந்தக் கோலத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போதுதான் அது நடந்தது. சட்டென்று ஒரு குடம் தண்ணீரைக் கோலத்தில் கொட்டினாற்போல் அது நடந்தது. “உங்க கோவிந்து மாமா தவறிட்டாராம்'' என்ற தகவலைக் கொட்டி விட்டுப் போனார் சின்னராசு வாத்தியார். அவர் குரல் கொஞ்சம் கெட்டி. கூட்டம் கூடிற்று! அம்மாவின் முகத்தில் கவலை பாய்ந்தது. இருப்பினும் அழுத்தமாக இருந்தது. கூட்டம் கலைந்ததும் அம்மா அடுப்புச் சாம்பலை அள்ளும் சாக்கில் அடுப்பறைக்குச் சென்றது. வெகு நேரம் அடுப்பையே பார்த்துக் கொண்டு நின்றிருந்தது. சேலைத் தலைப்பை எடுத்துக் கண்ணைத் துடைத்துக் கொண்டது.

கோவிந்து மாமா என் அம்மாவின் தம்பி. தாய்மாமன். வெடவெடவென்று நல்ல உசரம். கறுப்புதான் என்றாலும் முகத்தில் நல்ல மினுமினுப்பு. தேய்த்து அலம்பின காசிச் செம்பு மாதிரி மினுமினுப்பு. அடிக்கடி தலையை உலுக்கிக் கொள்ளும் ஸ்டைல். உதட்டில் நெளியும் புன்னகை. பரபரப்புத் ததும்பும் கண்கள். ஜாக்கிரதையாய்ப் பேசும் பேச்சு – ஒரு போதும் எவரையும் எதன் பொருட்டும் வார்த்தையால் மிதித்து விடக்கூடாது என்ற ஜாக்கிரதை! எதையும் முழுக்கத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல்.

## பாரதிபாலன்

அந்த ஆவல்தான் அவரை அழிப்பு செய்தது. எதைச் செய்தாலும் நவீனமாகவும், நளினமாகவும் செய்யும் செய்நேர்த்திதான் அவரை இழுத்தடித்தது. அமைதிதான் அவர் பாஷை. ஆனால் அவர் செயல்கள் எல்லாமே ஆடம்பரமானது. ஆர்ப்பாட்டமானது.

கோவிந்து மாமாதான் எங்கள் வட்டாரத்திலே கல்லூரிப் படியை மிதித்த முதல் ஆள். போன வேகத்திலே வேலைக்குச் சேர்ந்தார். அங்கிருந்து வெளியேறும் போது, ஒரு பழைய 'மர்பி' ரேடியோ அவரிடமிருந்தது. கூர்மையான பார்வையில் முள்ளை நுட்பமாக உருட்டி உருட்டி, பி.பி.சியையோ, பர்மா ஒலிபரப்பையோதான் எப்போதும் தேடிக் கொண்டிருப்பார். அவர் தாகம் அப்படி!

ஒரு லேத்தில் வேலைக்குச் சேர்ந்தார். பிற்பாடு ஸ்ரீஹரிகோட்டாவில் ராக்கெட் செலுத்தும் இடத்தில் வேலைக்குச் சேர்ந்தார்.



# நிழல் கோலம்

எங்கள் ஊரிலே புவனா அக்காள்தான் எஸ்.எஸ்.எல்.சி. என்ற எல்லையைத் தொட்டது. அதனால்தான் ஊர்க் கண்கள் முழுவதுவும் புவனா அக்காவை மொய்த்தன. புவனா அக்கா நல்ல அழகு. அழகு என்றால் முகத்தில் அடிக்கிற அழகில்லை. ரோஜா மாதிரி ஆர்ப்பாட்டமான அழகில்லை. தென்னம் பூ மாதிரி அடக்கமான அழகு! இளமை பொழிகிற அழகு. இரண்டாவது முறையாகப் பார்க்கத் தூண்டும் அழகு.

கோவிந்து மாமாதான் அக்காவுக்கு டீச்சர் ட்ரெயினிங் காலேஜில் இடம்பிடித்துத் தந்தார். ட்ரெயினிங் காலேஜுக்கு டீச்சிங் எய்ட்ஸ் - கற்பிக்கும் உபகரணங்கள், செய்து கொண்டு போக வேண்டும். புவனா அக்காவும் எல்லோரையும் போல் காகிதத்தை வெட்டி, அட்டையை வெட்டி, பூ செய்து, பொம்மைகள் செய்து, வீட்டைக் குப்பையாக்கியது. கோவிந்து மாமா புவனா அக்காவுக்கு விநோதமான பல டீச்சிங் எய்ட்ஸ் செய்து கொடுத்தார். எல்லாமே எதிர்காலம் பற்றின கற்பனை. விஞ்ஞான மாயவினோதங்கள்! கம்பியாலும் காந்தத்தாலும் டீச்சிங் எய்ட்ஸ் செய்து கொண்டு போக யார் உண்டு? மாமா செய்து கொடுத்தார். நிறையச் செய்து கொடுத்தார். கடமைக்காகச் செய்தது அல்ல அது. அதில் கற்பனை இருந்தது. விழியை மலரச் செய்யும் வியப்பு இருந்தது.

ஒருவழியாக அக்காவும் ட்ரெயினிங் முடித்து, பக்கத்து ஊரிலே வேலைக்கும் சேர்ந்து விட்டது. மாமாவைப் பார்த்தால் அவள் முகமே சிரிக்கும். அது கேலிச் சிரிப்பில்லை. இதழ் பிரிக்காது குரல் எழுப்பாது சிரிக்கிற சிரிப்பு.

கோவிந்து மாமாவால் அப்படி முடியவில்லை. சராசரி முறை மாப்பிள்ளைகள் போல், விடலைகள் போல் மாமாவால் நடந்து

நான்கு வருடம் அங்கு இருந்து விட்டுத் திரும்பி விட்டார். சுயமாக மெகானிக் சமாச்சாரங்களில் ஈடுபட்டார்.

கோவிந்து மாமா வேலைக்குச் சென்றுதான் சாப்பிட வேண்டும் என்ற நிலை அப்போது இல்லை. அவர் ஜீவித்திருப்பது பணத்தினால் அல்ல, மூளையினால். இது பலருக்குப் புரியவில்லை. ஒருவனுடைய பணத்தையும் - பகட்டையும் பார்த்துப் பரவசப்படுகிற அளவுக்கு ஒருவனுடைய மூளையைப் பார்த்துப் பரவசப்படுவதில்லை. 'கோவிந்து, உருப்படியா ஒரு தொழில் பண்ணப்படாதா? ஏன் இப்படி கிறுக்கன் மாதிரி திரியுறே...?' அறிவாளியைத் தங்களுடைய அறியாமையினாலே சிறுமைப் படுத்தி விடுகிறார்கள். மாமா நிறைய இடங்களில் சிறுமைப்படுத்தப்பட்டார். புவனா அக்கா விஷயத்தில் அவர் சிறுமைப்படுத்தப் பட்டதுதான் என்னால் மறக்கவே முடியாது!

கொள்ள முடியவில்லை. கள்ளத்தனமாகச் சிரிப்பதும், கண்காணாத போது கிள்ளி விடுவதும் மாமாவால் முடியவில்லை. காதலை இப்படித்தானா வெளிப்படுத்த வேண்டும்?

காதல் சந்தோஷமானது. ஒருவரைக் காதலிக்கிறோம் என்பதே சந்தோஷம் தரும் விசயமாகிறது. அதன் பொருட்டே எல்லாம் மகிழ்ச்சி தருகிறது. நெருப்பாய் வந்து இறங்குகிற வெயில் உறைக்காது போய் விடுகிறது. பன்றிகள் படுத்துறங்கி விட்டுப் போன புற்களும் அழகாகத் தெரிகிறது. பூக்களும் அழகாகத் தெரிகிறது. எதைப் பார்த்தாலும் இன்பம். எவரிடம் பேசினாலும் சந்தோஷம். இது காதலுக்கு மட்டுமே சாத்தியம் என்பது கோவிந்து மாமாவின் அபிப்பிராயம். மாமா எப்போதும், எல்லோரிடமும் சந்தோஷமாகவே இருந்தார்.

அக்கா காலை ஏழரை மணிக்கெல்லாம் கிளம்பி விடும். எங்கள் தெருவில் இருந்து மூன்று தெருத் தாண்டி பஸ் நிற்குமிடம். பஸ் நிறுத்தம் என்று தனியாக ஒன்றும் கிடையாது. மணி சைக்கிள் கடைப் பந்தலில்தான் நிற்க வேண்டும். அக்காவும் அங்குதான் வந்து நிற்கும். அந்த சைக்கிள் கடைக்காரன் அதை மகாபாக்கியமாகக் கருதினான்.

அக்கா வந்து நின்றதும் எல்லோரும் ஒருகணம் திடுக்கிட்டுத் திரும்புவார்கள். பிற்பாடு அவர்கள் பேச்சு இயல்பாக இருக்காது. பேசுகிற வார்த்தை ஒழுகிவிடும். கோவிந்து மாமாவும் அந்த சைக்கிள் கடையில்தான் இருப்பார். ஆனால் அவர் இதிலெல்லாம் அக்கறை காட்டிக் கொள்ள மாட்டார். ஆனால் கோவிந்து மாமா அக்கறை காட்டிய விசயம் ஒன்று நடந்தது!

புவனா அக்கா ஒருநாள் பள்ளிக்கூடம் போன மாத்திரத்திலே திரும்பி வந்து விட்டது. வந்ததும் யாருடனும் பேசவில்லை. புத்தகங்களை பட்டாசாலையில் சிதற விட்டது. மூலையில் போய் உட்கார்ந்து கொண்டு முகத்தை மூடிக் கொண்டது. ஒரு நிமிஷம் சப்தமே இல்லை. பின்பு லேசாக விசும்பல். விசும்பல் மெல்ல மெல்ல விசுவரூபம் எடுத்தது. அழுதது. அம்மா, "என்னடி... என்னடி... என்னாச்சு?" என்று அவள் தோளைப் பிடித்து உலுக்கினாள். அக்கா வாய் திறக்கவே இல்லை. அம்மா பதறிப் போனது. "அடேயப்பா... கடை வீதிப்பக்கம் போயி உங்கய்யாவைக் கூட்டியாப்பா" என்று என்னை விரட்டி விட்டது. நான் ஐயாவைத் தேடிப் போனேன்.

"உங்கய்யா இப்பத்தேன் சொஸைட்டி ஆளுங்களோட கிழக்குச் செம போறார்" என்றான் ஒருவன். நான் சைக்கிள் கடையில் கோவிந்து மாமாவிடம் போய்ச் சொன்னேன். அம்மா இதைக் கோவிந்து மாமாவிடம் போய்ச் சொல்லச் சொல்லவில்லை. எனக்குத்தான் அப்படித் தோன்றியது. முழுவதையும் கேட்டு விட்டுக் கோவிந்து மாமா ஒரு நிமிஷம் யோசனை செய்தார். உடனே ஒரு சைக்கிளை எடுத்தார். என்னைப் பின்னாடி உட்காரச் சொன்னார். இருபது நிமிடத்தில் புவனா அக்காவின் பள்ளிக்கூடத்திற்குப் போய் விட்டோம்.

பள்ளிக்கூடத்திற்குள் நுழைந்த உடனே அக்கா அழுததற்கான அடையாளம் தெரிந்து விட்டது. 'புவனா டீச்சருக்கும் ரெங்கசாமி வாத்தியாருக்கும் காதல்' என்றும், இன்னும் என்னென்னவோ அசிங்கமான வார்த்தைகளும் படங்களும் எட்டடிச் சுவர் முழுக்க நிறைந்து இருந்தன. எவனோ கரியில் இப்படி விஷத்தைக் கக்கி வைத்திருந்தான். கை நழுவி விழுந்த சர்க்கரைக் கட்டியை மொய்க்கும் எறும்புக் கூட்டம் மாதிரி, எத்தனை கண்கள் அதைக் கொத்திச் சுவைத்துக் கொண்டிருந்தன தெரியுமா?

எனக்கு அழுகை வந்து விட்டது. கோவிந்து மாமாவின் உடம்பு லேசாக உதறிற்று. கோவிந்து மாமா ஒரு பதினைந்து நிமிடம் பள்ளிக்கூடத்தைச் சுற்றி வந்தார். அந்த ரெங்கசாமி வாத்தியாரை ஒரு மரத்தடி நிழலில் கூட்டி வந்து நிறுத்தினார்.

ரெங்கசாமிக்கு நாற்பதுக்கு மேல் வயசு இருக்கும். கச்சலான உருவம். பொன்னிறப் பட்டு ஜிப்பா. மஞ்சளும் சந்தனமும் இல்லாத ஒரு நிறம் கொண்ட ஜிப்பா. பென்சிலால் வரைந்த மீசை. சோடாபுட்டிக் கண்ணாடி!

"இது யாருடைய வேலை?" என்றார் கோவிந்து மாமா.

"தெரியாது" என்றார் ரெங்கசாமி.

"நீர் புவனாவைக் காதலிக்கிறீரா?" என்று மாமா கேட்டதும் அவர் முகம் கோணலாயிற்று. இப்படி ஒரு நேரடிக் கேள்வியை அவர் எதிர்பார்த்திருக்க மாட்டார்.

## சமயத்தில் உதவிய போட்டோக்கள்!

**"நான் ஏன் அந்த பொம்மைகளைப் படம் எடுத்தேன்? வெறும் ஆர்வம் என்பதைத் தவிர வேறு காரணமில்லை. சிவப்பிரகாச ஸ்தபதி எனக்குத் தெரிந்தவர். 1982ல் கபாலீஸ்வரர் கோவில் கும்பாபிஷேகம் நடந்த சமயம். கோபுர சீரமைப்புப் பணி அவர் தலைமையில் நடந்து கொண்டிருந்தது. ஓர் ஆர்வத்தில், அவரிடம் அனுமதி கேட்டு, சாரத்தில் ஏறி, சிவபுராணக் கதைகளைச் சொன்ன அந்த அழகு சிற்பங்களைப் படம் எடுத்தேன். அது**

இன்று இப்படி உதவும் என்று எதிர்பார்க்கவில்லை...'' என்றார் போட்டோகிராபர் யோகா.

எப்படி உதவியது?

சமீபத்தில் நடந்த கபாலீஸ்வரர் ஆலய கும்பாபிஷேகத்தை ஒட்டி கோபுர சிற்பங்களைச் சரிபார்த்து, வர்ணம் தீட்டிய சமயம், அவை தம் ஒரிஜினல் நிறம், அமைப்பிலிருந்து மாறாமல் இருக்கிறதா என்று சரிபார்க்க யோகாவின் படங்கள் தாம் உதவியிருக்கின்றன!





• யோகா

''கோவில் சிற்பங்களை வரை படமாக— சிரமப்பட்டு-வரைந்து வைப்பதைக் காட்டிலும் இதுபோல் புகைப்படங்களாக எடுத்து வைப்பது எத்தனை வசதியாக இருக்கிறது!'' என்றாராம் சிவப்பிரகாச ஸ்தபதி.

கபாலி கோவில் கோபுர பொம்மைகளை மட்டும் யோகா எடுத்திருக்கும் படங்களின் எண்ணிக்கை சுமார் 250!

"நீர் யார்?" என்றார் நடுங்கிய குரலில் வாத்தியார்.

"இந்தக் கேள்விக்கு நான் 'மனுஷன்' என்று மட்டும் பதில் சொன்னால் போதும். அதுவே பொருத்தமான பதிலாகத்தான் இருக்கும். நான் மனுஷனை மதிக்கிறவன். அதனாலே சொல்றேன். நான் புவனாவோட தாய்மாமன்."

"......................"

"புவனாவைக் காதலிக்கிறீர்களா? இது யாரோட வேலை?"

"தெரியாது!"

"என்ன தெரியாது? காதலிப்பதா? இல்லை இதை எழுதியது யார்னா?"

"ரெண்டுமே."

"கரியிலே எழுதிப் போட்டுட்டாலோ, கடுதாசி கொடுத்துட்டாலோ அது காதலா? காதலிப்பதுங்கிறது அவ்வளவு சுலபமா என்ன?"

"வீணா என் மீது பழிபோட வேண்டாம்."

"பின்னே? இது யார் வேலை?"

"எனக்குத் தெரியாது. ஆளை விடு." சரசரவென்று நடந்து விட்டார் ரெங்கசாமி. மர நிழல் தாண்டி நடு வெயிலுக்குப் போயி அவர் மறையும் வரையில் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார் கோவிந்து மாமா. இழுத்து ஒரு பெருமூச்சு விட்டார். அவர் முகத்தில் எல்லாம் அடங்கி விட்ட மாதிரி ஒரு திருப்தி.

**வீ**ட்டிற்கு வந்ததும் புவனா அக்காவைப் பார்க்கப் பிடிக்காமல், உள் அறைக்குள் போய் படுத்துக் கொண்டேன். புவனா அக்காவே என்னிடம் வந்தது. அழுது வீங்கிப் போன முகம். நுனி மூக்குச் சிவந்து, காது மடல்கள் சிவப்பேறி இதுவும் ஒரு அழகுதான். 'எங்கே போயிட்டு வாரே?' என்று ரகசியக் குரலில் கேட்டது. நான் நடந்ததைச் சொன்னேன். அவ்வளவுதான் அக்கா என்னைத் துளைத்து எடுத்து விட்டது. 'நீ புவனா அக்கா வீட்டுலெ அழுவுதுனு சொன்னதும், கோவிந்து மாமா என்ன சொன்னார்? அவர் முகம் அப்ப, எப்படி இருந்தது? நீ சொன்ன உடனே ஸ்கூலுக்குக் கிளம்பிட்டாரா? அந்தத் திருடன், அதான் அந்த ரெங்கசாமி... அந்தாளோட சண்டை போட்டாரா? என்னைப் பற்றி வேற என்னவெல்லாம் கேட்டார்?' இது மாதிரி ஆயிரத்தெட்டுக் கேள்விகள்!

ஆனால் இந்தக் கேள்விகளுக்கெல்லாம் புவனா அக்காவுக்குப் பதில் கிடைத்ததோ என்னவோ. புவனா அக்கா, கோவிந்து மாமா மீது கொண்டிருக்கும் காதலுக்கு நிறையச் சாட்சியங்கள் கிடைத்து விட்டன.

கோவிந்து மாமா எங்கள் வீட்டிற்கு அடிக்கடி வர மாட்டார். பக்கத்து வீடுதான். குரல் கொடுத்தால் பதில் கிடைக்கும் தூரம்தான். இருந்தாலும் அடிக்கடி வீட்டிற்கு வர மாட்டார். வரக்கூடாது என்று இல்லை. ஆனாலும் வர மாட்டார். கோவிந்து மாமாவின் அப்பா - அதாவது எங்கள் தாத்தா தவறிப் போய் ரொம்ப வருஷமாகி விட்டது. பாட்டியும் சமீபத்தில் போய் விட்டது. தூரத்து உறவுக் கிழவி ஒன்றுதான் கோவிந்து மாமாவுக்குச் சோறாக்கிப் போட்டுக் கொண்டிருந்தது. ஒருநாள் கோவிந்து மாமா எங்கள் வீட்டிற்கு வந்தார்.

நடைவாசலில் நெடுநெடுவென்று நிழல் தட்டி விட்டாலே அக்காவுக்குச் சந்தோஷமாகிவிடும். தன் சந்தோஷத்தை அக்கா உள் வீட்டுக் கதவிடம்தான் காட்டும். கதவை ஒருக்களிப்பதும் திறப்பதுமாய் இருக்கும். கதவு சிணுங்கும். அந்தக் கதவை அகலத் திறந்தால் பட்டா சாலை முழுவதும் தெரியும். கோவிந்து மாமா பட்டாசாலையில்தான் உட்கார்ந்திருந்தார். எங்கள் வீட்டு 'மர்பி' ரேடியோவில் இரைச்சல் வருகிறதாம். ரேடியோவை மடியில் தூக்கி வைத்திருந்தார். ரேடியோ துணி

உறையை நீக்கி விட்டார். குழந்தையை மடியில் குப்புறப் போட்டுக் கொண்டு குளிப்பாட்டுவது மாதிரி, ரேடியோவை போட்டிருந்தார். வயர் களுக்குள் விரலை விட்டு நோண்டிக் கொண் டிருந்தார்.

புவனா அக்கா வெகு நேரம் வரையிலும் நின்று கொண்டிருந்தது. மாமா சட்டென்று திரும்பி 'தண்ணீர் வேண்டும்' என்று அக்கா விடம் சைகை காட்டினார். அக்கா பட் டென்று பிடித்திருந்த கதவை உதறி விட்டு வீட்டிற்குள் போனது. சில்வர் செம்பைப் படபடவென்று துலக்கித் தண்ணீர் கொண்டு வந்தது. தண்ணீரை வைத்து விட்டு ஒருகணம் மாமாவின் முன்நின்றது. கோவிந்து மாமா 'மர்பி'யை நோண்டிக் கொண்டிருந்தார். "பேசாமல் நான் ஒரு மர்பி ரேடியோவாகப் பிறந்திருக்கலாம்" என்று கூறிவிட்டு புவனா அக்கா விருட்டென்று நகர்ந்து விட்டது. அக்கா போன பிற்பாடுதான் மாமாவிற்கு அது உறைத்திருக்கும் போல. திரும்பி அக்காவைப் பார்த்தார். அக்கா கதவை மூடிக் கொண்டது. திறக்கவேயில்லை.

மறுநாள் -

பள்ளிக்கூடத்தில் கரித்துண்டில் எழுதிய



வன் அதைக் காற்றில் கரைத்து விட்டான். சுவரில் எழுதினால் அழித்து விடலாம். காற்றில் எழுதி விட்டால்? ஊர் முழுக்கச் செய்தி பரவியது. ஐயாவுக்கு ஆங்காரம். அடக்க முடியாத ஆங்காரம். வேஷ்டியை மடித்து கட்டிக் கொண்டு விந்தி விந்தி ஓடி வந்தார். வாசலில் உட்கார்ந்திருந்த என்னை ஓங்கி ஒரு மிதிமிதித்து, "கோவிந்து மாமாவை கூட்டியாடா..." என்றார்.

போய் கூப்பிட்டு வந்தேன்.

''எதுக்கு இந்த வேலையெல்லாம் உனக்கு...?''

"என்னது?"

"புவனா பள்ளிக்கூடத்துலெ போயி..."

"அசிங்கமா எழுதிப் போட்டிருந்தான்."

"நீர் அழிக்கப் போனீராக்கும். அழிச்சிட முடியுமா? உம்மாலெ அதை அழிச்சுட முடி யுமா? போ. போய் அழி பார்க்கலாம். இப்ப ஊர் முழுக்க எழுதிப் போட்டாப்பல ஆச்சு. இந்த அசிங்கத்தை எல்லாம் கேக்கும்படியாப் பண்ணிட்டியே. ஊர்வாய் முழுக்க உன் னாலெ சோப்புப் போட்டு அலம்பவா முடியும்? புண்ணாக்கு மாதிரி என்ன காரியம் பண்ணிட்டு வந்திருக்க?"

"நான் என்ன பண்ணினேன்?"

"த்தூ! பேச்சப் பார்றா... பேச்சை..."

"மாமா, முதல்ல மனுஷனை மதிக்கப் பழகுங்க."

"நான் மானத்தை மதிக்கிறவன். மனுஷனை அல்ல..."

கோவிந்து மாமா ஒருகணம் திகைத்து நின்றார். அவர் உதடுகள் நடுங்கின. ஒரே ஒருகணம் கதவுக்குப் பக்கத்தில் நின்றிருந்த புவனா அக்காவைப் பார்த்தார். என்றைக்கும் இல்லாமல் அவர் கண்களில் நீர் தேங்கி நின்றது. வீட்டை விட்டு வெளியேறி விட்டார்.

அவர் உடனே வெளியேறியது தன் கோபத்தைக் காட்ட அல்ல; தன் எதிர்ப்பைக் காட்ட அல்ல. எங்கே அழுது விடுவோமோ என்ற பயத்தினால், மாமா வெளியேறி வீதிக்குப் போய் விட்டார்.

எனக்கு ஓடிப் போய் மாமாவின் கைகளைப் பிடித்துக் கொள்ள வேண்டும் போல வந்தது. அப்பாவுக்கு ஆங்காரம். மாமா ஸ்கூலுக்குப் போனதினாலதான் விசயம் ஊர் தாண்டி வந்திருக்கிறது. இல்லாவிட்டால் உள்ளூரிலே அழிந்திருக்குமே என்ற ஆங்காரம்.

மறுநாளே கோவிந்து மாமா காணாமல் போய் விட்டார். எங்கே போனார் எப்படிப் போனார் என்று யாருக்கும் தெரியவில்லை.

ஆனால் ஒன்று மட்டும் எனக்குத் தெரியும், கோவிந்து மாமா யாரையும் நோவடிக்க வேண்டும் என்று இதைச் செய்திருக்க மாட்டார். தன் நோவு தாங்காதுதான் எங்காவது போயிருப்பார். இந்த சமூக அவலங்களைக் கண்டு கோவிந்து மாமா ஒருபோதும் முகம் சுளித்ததில்லை. ஒதுங்கிப் போக முயன்றதில்லை. ஆனால் அதன் குறை பாடுகள் குறித்து அலுத்துக் கொள்வார். ஒரு போதும் இந்த சமூகத்தை அவர் வெறுத்த தில்லை.

ஒரு வருடம் கழிந்த பிற்பாடு அழுகைக்கும் ஆர்ப்பாட்டத்திற்கும் இடையில் புவனா அக்காவுக்குத் திருமணம் நடந்தது. அப்போது கோவிந்து மாமா ஸ்ரீ ஹரிகோட்டாவில் இருப்பதாகத் தகவல். பிற்பாடு ஒருவர் ஒரிஸா வில் குர்தா ரோடு ரயில்வே ஸ்டேஷனில் பார்த்ததாகச் சொன்னார்.

கடைசியா நம்ம சின்னராசு வாத்தியார் மவன் வேலை பார்க்கும் டெல்லி டாட்டா கம்ப்யூட்டர் கன்சல்டன்ஸி சர்வீஸில் கோவிந்து மாமாவும் வேலை பார்ப்பதாகத் தகவல். அப்போதுதான் அவர் புவனா அக் காவுக்கு – எங்கள் வீட்டுக்கு – கம்ப்யூட்டரிலே ஒரு கோலத்தின் டிஸைனை போட்டு அனுப்பி யிருந்தார். பெரிய கோலம். பதினெட்டுப் புள்ளி இருபது வரிசையில் ஒரு கோலம். அழகான கோலம்! - தேர்க் கோலம்!



# ஏன் விலகினார் சித்து?

தமது மூட்டை முடிச்சுக்களுடன் இங்கிலாந்திலிருந்து பாதி டூரிலேயே பாட்டியாலாவுக்குத் திரும்பி விட்டார் சித்து. பின்னணி என்ன?

"இது நானா நீயா பிரச்னை அல்ல. இந்திய அணியின் நலன்தான் எனக்கு முக்கியம்" என்றிருக்கிறார் அசாருதீன். ஆனால் இது எத்தனை தூரம் உண்மை என்று தெரியவில்லை.

"இரண்டு ஒருநாள் பந்தயங்களில் எனக்கு இடமில்லை என்பது, எனக்குப் போட்டியன்று காலையில்தான் தெரிவிக்கப்பட்டது. அந்த சமயத்தில் அசார் என்னைப் பார்த்து (கிண்டலாகச்) சிரித்தார்" என்றிருக்கிறார் புண்பட்ட சித்து.

அசார்-சித்து உரசல் ஏன்?

உலகக் கோப்பையில் ஸ்ரீலங்காவுடன் நடைபெற்ற அரையிறுதிப் போட்டியில் இந்தியாதான் முதலில் பேட் செய்ய வேண்டும் என்பதை அழுத்தமாகக் கூறிய இந்திய ஆட்டக்காரர் சித்துதான். அசார் வேறுவிதமாக முடிவெடுத்தார். நம் அணி ஓரம் கட்டப்பட்டது.

மனோஜ் பிரபாகரை நீக்கியதில் அசாருக்கும் பங்கு உண்டு. மனோஜ் சஸ்பெண்ட் செய்யப்பட்ட போது, அவர் திரும்ப சேர்த்துக் கொள்ளப்பட வேண்டுமா என்பது பற்றி இந்திய அணியினரிடையே ஒரு கருத்துக் கணிப்பை நடத்த முயற்சி எடுத்துக் கொண்டார் அசார். இது தேவையில்லாத வேலை என்று அதைத் தடுத்து நிறுத்தினார் சித்து.

சித்து விவகாரத்தில் இரண்டு முன்னாள் கிரிக்கெட் வீரர்கள் எடுத்திருக்கும் நிலைப்பாடுகள் சுவையானவை. ஒருவர் சந்தீப் பாட்டில். இன்றைய இந்திய கிரிக்கெட் அணியின் மானேஜரும் கூட. தம் முழு ஆதரவையும் அசாருக்கு மறைமுகமாகத் தெரிவித்திருக்கிறார்.

"சித்து விடுபட்டதற்கு ஏதோ அசார் மட்டுமே காரணம் என்பது போல் பத்திரிகைகள் கூறுவது சரியில்லை. தேர்வாளர் நாகராஜ், நான், அசார், உதவி கேப்டன் சச்சின் டெண்டுல்கர் ஆகியோரின் கூட்டு முடிவு இது" என்றிருக்கிறார்.

"அசார் - சித்துவுக்கிடையே கொஞ்ச காலமாகவே இடைவெளி விழுந்தது மட்டும் எனக்குத் தெரிந்திருந்தால், பிளவை சரி செய்திருப்பேன்" என்றும் ஆதங்கப் பட்டிருக்கிறார்.

மற்றொருவர் கபில் தேவ். 'உலகக் கோப்பைப் பந்தயங்களுக்காகத் தேர்வு செய்யப்பட்ட மைதானங்கள் சரியில்லை என்பதை அசாருதீன் கிரிக்கெட் போர்டிடம் சொல்லாமல், பத்திரிகையாளர்களிடம் சொன்னது தவறு' என்று கபில் குறிப்பிட்டதுண்டு. மனோஜ் பிரபாகர் விலக்கப்பட்டபோது "ஒரேயொரு (காஸ்ட்லியான) ஓவர் ஒருவரை அணியிலிருந்தே நீக்கி விடும் என்பது எனக்குத் தெரியாத விஷயம். ஆனால் அசார் எல்லாம் தெரிந்தவர்!" என்று கிண்டலடித்தார்.

சமீபத்தில் "அசாரின் மீதுதான் நிச்சயம் தவறு இருக்கிறது. சித்துவைப் போன்ற திறமைசாலியை இந்திய அணி இழந்தது பெரும் நஷ்டம்" என்றார்.

அசார் சக விளையாட்டு வீரர்களோடு கலந்து பேசுவதேயில்லை என்ற சித்துவின் குற்றச்சாட்டுக்கு சமாளிப்பான ஒரு பதிலைக் கூறியிருக்கிறார் - வேறு யார்? - சந்தீப் பட்டீல்.

"இப்போதெல்லாம் (அதாவது சித்து விலகல் நிகழ்ச்சிக்குப் பிறகு) அசார் தாமாகவே முன் வந்து அணியினரோடு அதிகம் பேசுகிறார். அவர்கள் கருத்துகளைக் கேட்கிறார்" என்று சொல்லியிருக்கிறார்!

கண் கெட்ட பிறகு...?

— ஜி.எஸ்.எஸ்.

# நடராஜ் எஸ்டேட்ஸ்



வழங்கும், ஈடு இணையற்ற லாபகர திட்டம்

(சென்னை நகருக்கு மட்டும்)



## வாரம் தோறும் காய்கறிகள்

உங்கள் இல்லம் தேடி வருகிறது

தினசரி
காய்கறி வாங்கறது
பெரிய சமாச்சாரமா
இருக்கும்
போலிருக்கே?

பெரிய
சமாச்சாரமும் இல்லே
சின்னச் சமாச்சாரமும் இல்லே
நடராஜ் எஸ்டேட்ஸ்லே
போய் மெம்பர் ஆயிட்டு வாங்கோ.
அப்புறம் பாருங்கோ...
காய்கறிக்கு பஞ்சமே
இருக்காது




### காய்கறி விபரம்

தக்காளி, வெண்டைக்காய், கத்தரிக்காய், வாழைக்காய், புடலங்காய், அவரைக்காய், பாகற்காய், பீர்க்கங்காய், கண்டைக்காய், சுரைக்காய், பூசணிக்காய், பரங்கிக்காய், கொத்தவரங்காய், முருங்கைக்காய், முள்ளங்கி, இஞ்சி, கொத்துமல்லி, கறிவேப்பிலை, மற்றும் கீரை வகைகளும் மாற்றி மாற்றி சப்ளை செய்யப்படும். அத்துடன் கேரட், பீட்ரூட், கோஸ், உருளைக்கிழங்கு, வெங்காயம் போன்றவைகளும் சப்ளை செய்யப்படும்.

- வாரம் ஒருமுறை சப்ளை வேண்டுவோர் ரூ.5000/= செலுத்தி 3 வருடங்களுக்கு மெம்பர் ஆக வேண்டும்.
- வாரம் இருமுறை சப்ளை வேண்டுவோர் ரூ.10,000/-செலுத்தி 3 வருடங்களுக்கு மெம்பர் ஆக வேண்டும்.
- 3 வருடங்களுக்குப் பிறகு மீண்டும் ரினிவல் செய்து கொள்ளலாம். அல்லது திரும்ப பெற்றுக் கொள்ளலாம்.
- உங்கள் மெம்பர்ஷிப் கட்டணத்திற்கு 12% வட்டியும் உண்டு.
- சப்ளை செய்யப்படும் காய்கறிகளுக்காக நீங்கள் தனியே பணம் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை.
- ஒவ்வொரு முறையும் சப்ளை செய்யப்படும் காய்கறிகளின் மதிப்பு ரூ.50/- (சராசரி).
- இலவசம் - காய்கறி நறுக்கும் S.S.கட்டர் மற்றும் நடராஜ் பதிப்பகத்தின் வெளியீடு ஒன்று.

## NATARAJ ESTATES

"Shanthi Complex", 3rd Floor, 26. Ranganathan Street, T. Nagar, Madras - 600 017.

*Branches : Tiruvarur, Thanjavur, Kancheepuram, Pudukottai, Bangalore.*

**Phone : 4342098, 4840150**



NATARAJ GROUP OF COMPANIES
Nataraj Finance & Investments
Nataraj Chits (Tamilnadu) Pvt. Ltd.,
Nataraj Exports overseas, Nataraj Publications,
Nataraj Oil Mills, T.K. Geetha Agro Products.

**24% P.A.**



# “ஐயா தயவுல பிஸினஸ் அபாரம்!”

புது அம்பாசிடர் கார் அந்த வீட்டு வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து பட்டு வேஷ்டி, சட்டை அணிந்த ஒரு பெருத்த, கருத்த உருவம் இறங்கியது. கூடவே, கார் டிரைவர் பழக்கூடைகள் மற்றும் கலர் காகிதம் சுற்றப் பட்ட பேக்கட்டுகளுடன் பின் தொடர்ந்தான்.

வந்தவர் வாசலை அடைந்து கதவைத் தட்டியதும் "யார் வேணும்", என்று குரல் கொடுத்தபடியே பானு ஓடி வந்தான். வந்தவள் வாசல் முன் நின்ற பெரிய உருவத்தைப் பார்த்து சற்று மிரண்டு ''அம்மா! இங்க வாயேன். யாரோ வந்திருக்கா'' என்று இரைந்தான். பின்கட்டில் வேலையாக இருந்த ஜானகியும் பானு போட்ட கூச்சலைக் கேட்டு வாசல் பக்கம் விரைந்தாள். வந்தவள் வாசலில் நின்ற பெரிய உருவத்தையும், அவர் கொண்டு வந்திருந்த பொருட்களையும் பார்த்து, இவர்கள் வீடு தெரியாமல் வந்து விட்டார்களோ என்று எண்ணி "உங்களுக்கு யாரைப் பார்க்கணும்?" என்று சற்று பதட்டத்துடன் கேட்டாள்.

வந்தவர் ஜானகியின் சந்தேகத்தைப் போக்க எண்ணி, ''நான் ஹெல்த் ஆபிஸர் சாருக்கு வேண்டப்பட்டவன். சார் இருக்காரா? இல்லேன்னா, நீங்க உத்தரவு கொடுத்தால் நான் இருந்து பாத்துட்டுப் போறேன்" என்று பணிவுடன் கேட்டார்.

“சரி, உள்ளே வந்து உட்காருங்க. வந்துடுவார்" என்று சொல்லி பானுவைக் கூப்பிடும் பாணியில் உள்ளே சென்றாள் ஜானகி.

சற்று நேரத்திற்கெல்லாம் 'ஹெல்த் ஆபீஸர்' டாக்டர் வெங்கல்ராவ் ஜீப்பில் வந்து இறங்கினார். வீட்டில் நுழைந்ததும் அங்கு அமர்ந்திருந்த பெரிய உருவம் அவரை வணங்கி நிற்பதை சற்றும் எதிர்பார்க்கவில்லை.

“யார் நீங்க? என்ன வேணும்? இதெல்லாம் என்ன?" என்று கேள்விக்கணைகளைத் தொடுத்தார்.

வந்தவர் சற்று அசந்து விட்டாலும் ஒருவாறு சமாளித்துக்கொண்டு ''ஐயாவுக்கு என்னை ஒரு வேளை ஞாபகமிருக்காது. நான்தான் "மஸ்கிடெக்ஸ்" கொசுவத்தி தயாரிப்பாளர் மாடசாமி. ஐயாவைப் பார்த்து மரியாதை செய்துட்டுப் போலாமின்னு வந்தேன். ஐயா தயவிலேதான் என் பிசினெஸ் இப்போ அமோகமா நடக்குது. நானும் நல்லபடியா இருக்கேன். ஐயாவின் ஆதரவு எனக்குத் தொடர்ந்து இருக்கணும். என் பிசினஸ் முன்னேற்றத்திற்கே ஐயா ஆதரவு தான் காரணம். அதற்கு நன்றி சொல்லத்தான் தங்களைக் காண வந்தேன்'' என்று மிகவும் பணிவாகப் பேசி முடித்தார்.

'ஹெல்த் ஆபீஸர்' வெங்கல்ராவுக்கு ''மஸ்கிடெக்ஸ்'' உரிமையாளர் மாடசாமி பேசியது புதிராகவே இருந்தது. இந்த ஆளுக்கு எப்போ, எப்படி உதவி செய்தேன். ஏன் இப்படி 'ஐஸ்' வைக்கிறான் என்பது புரியாத புதிராக இருந்தது. தன் சந்தேகத்திற்கு விளக்கம் பெற எண்ணியவராக, “நீங்கள் சொன்னது எனக்கு ஒன்னும் புரியவில்லை. உங்கள் கொசுவத்தி தயாரிப்பு வளர்ச்சில் நான் எந்த வகையில் உதவி செய்தேன்? இப்படி ஒரு தொழில் நீங்கள் ஆரம்பித்து நடத்துவது பற்றியே எனக்கு இப்போ தான் தெரியும். அப்படி இருக்க, நான் உங்கள் பிசினஸுக்கு ரொம்பவும் உதவியதாக எப்படிக் கூறுகிறீர்கள்?'' என்று சற்று சூடாகவே கேட்டார்.

மாடசாமி விஷயத்தை சற்று விளக்கமாக சொல்ல எண்ணி "பெரியவங்க பெரியவங்க தான். என்னை இந்த நிலைக்கு ஏற்றிவிட ஏணியாக இருந்தும், அதை ஒரு பெரிசா பண்ணிக்காம பெருந்தன்மையா நீங்க பேசுறது உங்கள் பெரிய மனுஷத்தன்மையைத்தான் காட்டுது சார். நீங்கள் மட்டும் உங்கள் கொசு ஒழிப்புத் திட்டத்தை முறைப்படி செயல்படுத்தி இருந்தால் இந்த ஊரில் கொசுவத்தி பாக்டரியை மூட வேண்டி இருந்திருக்கும். எல்லாம் ஐயா போட்ட பிச்சை. நீங்கள் கொசு ஒழிப்பிற்கு பெரிய திட்டங்கள் போட்டதோடு சைலென்டா இருந்திட்டதால்தான், கொசு உற்பத்தி பெருகி, வேறு வழி இல்லாம ஜனங்க அதற்காக எங்கள் கொசு வத்தியை வாங்க வேண்டிய நிலை வந்தது. எங்களுக்கு வியாபாரம் பெருகியது. இதற்காக உங்களுக்கு எவ்வளவு நன்றி சொன்னாலும் தகும். நீங்க நல்லாயிருக்கணும் சார்!"

'ஜிபி'

## 24. கால சர்ப்பம்!

மதங்கொண்ட யானையை அங்குசத்தாலும், காட்டுத் தீயை மழையினாலும், பெண்களின் கோபத்தை அன்புடைய பெற்றோராலும், ஊழ்வினையை எம்பெருமானைச் சரணடைவதன் மூலமாகவும் மெள்ள மெள்ள அடக்க இயலும் என்கிறது ஒரு வடமொழி வாக்கியம். அது எத்தனை உண்மை என்பதை ருத்ராம்பாளின் அறைக்குள் நுழைந்த காகதீய மன்னன் கணபதி அன்று உணர்ந்து கொண்டான்.

அறைக்குள் நுழைந்ததும் எதிர்பாராமல் மன்னனை நோக்கிப் பறந்து வந்தது ஒரு கனத்த குவளை. மின்னல் வேகத்தில் வெளிவந்து தடுத்த மன்னனின் உடைவாளால் பலமாகத் தடுக்கப் பட்டதால் பெரும் ஒலியை எழுப்பியபடி அது தரையில் உருண்டது. அறையின் சாளரத்தினருகில் நின்று உக்கிரமாகத் திரும்பிய இளவரசி, தான் விட்டெறிந்த பொருள் தரையில் உருண்டதையும், சற்றுப் பிசகியிருந்தாலும் அது தன் தந்தையையே தாக்கியிருக்கக் கூடுமென்பதையும் உணர்ந்ததால் சற்றுப் பதற்றத்துடனேயே மன்னனை நெருங்கி அவன் வலிய தோள்களை அணைத்துக் கொண்டாள். "என்னை மன்னித்து விடுங்கள், தந்தையே!" என்றாள் வருத்தம் தொனித்த குரலில்.

அவளைச் சிறு குழந்தை போல அணைத்து, மெள்ள நடத்தி மஞ்சத்தில் அமரச் செய்த மன்னனின் குரலில் பரிவு ஒலித்தது. "மகளே, கோபம் நம்மைச் சேர்ந்தவர்களை மட்டுமல்ல, நம்மையும் அழித்து



# அந்திமகும்

விடும். இத்தனை கோபம் பெண் களுக்கு ஆகாது மகனே!" என்றவன் வாயிலில் நின்ற வீரனை, கரங்களைத் தட்டியழைத்து, உணவு கொண்டு வரும்படி பணித்தான்.

இளவரசி பதிலேதும் கூற வில்லை. அவள் விழிகள் அறையின் கோலத்தையும், கீழே சிதறிக் கிடந்த பொருட்களையும் வெறித்துக் கிடந்தன. அவள் உடைகள் இன்னும் ஈரம் உலராமலிருப்பதையும் சுருண்ட குழல்கள் நனைந்து கிடப்பதையும் கவனித்தான் மன்னன். அவள் சென்று வந்த இடம் பற்றித் தெரிந்திருந்ததால், எதிர்பாராதவிதமாக அவள் பவநாசினி நதியில் விழுந்திருக்கிறாள் என்பதையும் யூகித்தான். அவள் குழல்களைப் பிணைத்திருந்த பட்டுக் கயிறுகளைப் பிரித்து கூந்தலை காற்றில் உலரவும் விட்டான். இளவரசியின் உஷ்ணம் மெள்ள இறங்கத் தொடங்கியது, அவள் முகத்தில் தெரிந்தது.

உணவுத்தட்டுடன் உள்ளே நுழைந்த பணிப் பெண்ணின் விழிகள், மன்னன் செய்து கொண்டிருந்த பணியைக் கண்டதும் வியப்பை வெளிப்படுத்தின. "பிரபு...." என்று ஏதோ கூறவந்தவளை பார்வையால் அடக்கிய மன்னன் ஏதும் பேச வேண்டாமென்றும் சைகை செய்தான்.

இளவரசியின் விழிகள் அச்சமும் வியப்பும் கலந்து கிடந்த பணிப் பெண்ணின் முகத்திலும், அவள் கழுத்தில் தென்பட்ட காயத்திலும் சற்று நிலைத்தன. அவள் குரல், "பெண்ணே, வா இங்கே" என்று கடுமையுடன் அழைத்தது.

மிதமிஞ்சிய அச்சம் முகத்தில் விரவிக் கிடக்க, தன்னை நெருங்கிய பணிப் பெண்ணை நோக்கி அடுத்த உத்தரவும் அதே கடுமையுடன் வந்தது: "அதோ அந்தக் கோடியிலிருக்கும் பேழையைத் திற!"

அறையின் கோடியிலிருந்த பெரும் மரப்பேழையை அணுகி மெள்ள அதைத் திறந்த பணிப் பெண்ணின் விழிகள் அகல விரிந்தன. பொன்னும் மணியும், பவளமும், முத்து மாலைகளும், கற்கள் பதித்த பொன்னாபரணங்களும் அதில் நிறைந்து பளீரிட்டன.

"நீ விரும்புவதை அதிலிருந்து எடுத்துக் கொள். இரு தினங்கள் ஓய்வெடுத்துக் கொண்டபின்பு பணிக்கு வந்தால் போதுமானது. மருத்துவரிடம் சென்று காயத்தை கவனித்துக் கொள். நீ போகலாம்" என்றாள் இளவரசி. ஒரு கணம் திகைத்த பணிப் பெண், இரு கரங்களிலும் பொன்னாபரணங்களை எடுத்துக் கொண்டு வெளியே விரைந்தாள்.

**ப**ணிப் பெண் வெளியேறியதும் மகளைப் பரிவுடன் நோக்கிய மன்னன், "மகளே, என்ன நேர்ந்தது? உன்னை பவநாசினியில் யார் தள்ளியது?" என்று வினவினான்.

மன்னனின் யூகத்தை உள்ளுக்குள் வியந்த இளவரசி மெள்ள நிகழ்ந்தவற்றை விளக்கினாள். இடையில் குறுக்கிடாமல் முழுவதும் கேட்ட மன்னன், இறுதியாகக் கூறினான்: "ஆலயத்திற்கு வந்த யாதவ இளவலை நீ சிறை செய்ய முயன்றது தவறுதான் மகளே. ஆனால் அவனைத் தப்பிக்க வைக்க வந்தவன் நிச்சயம் முதியவனுமல்ல, சீனத்து வணிகனுமல்ல" என்றவனின் விழிகள் சிந்தனையைக் காட்டின. சற்றுக் கழித்து அவன் சொற்களும் சிந்தனையுடனேயே உதிர்ந்தன. "ஐந்து கணைகளுடன் கூடிய போர் வில் என்றா கூறினாய்? அப்படியானால் அவன் யாங்சின்னாகத்தானிருக்க வேண்டும். போசள சிங்கணனிடமிருந்து தப்பியவன் மீண்டும் பாண்டியரை அடையாமல் வடக்கே யாதவ நாட்டை நோக்கிச் செல்கிறானென்றால் அதற்குத் தகுந்த காரணமிருக்க வேண்டும்."

**ம**ன்னனின் சிந்தனையினூடே வாயிலில் நின்றிருந்த வீரன் குறுக்கிட்டான். உள்ளே தயங்கியபடியே நுழைந்தவன், "பிரபு, சோழ நாட்டிலிருந்து நமது ஒற்றன் வந்திருக்கிறான். தங்களை அவசரமாகக் காண விரும்புகிறான்..." என்றான்.

உள்ளே நுழைந்து மன்னனையும் இளவரசியையும் சேர்த்தே வணங்கியவனின் புழுதிபடிந்த உடையும், முகத்தில்



விஷ்வக்சேனன்

தெரிந்த களைப்பும் நீண்ட பயணத்திற்குப் பின் நேராக மன்னனைக் காண வந்திருப்பதைத் தெரிவித்தன. முகத்திலும் இலசான பதற்றம் தெரிந்தது. அவன் ஏதோ விரும்பத்தகாத செய்தியுடன் வந்திருப்பதைப் புரிந்து கொண்ட மன்னன், "வீரனே, தயங்க வேண்டாம், கூற வந்ததைக் கூறு!" என்றான்.

"பிரபு, காஞ்சியில் கண்ட கோபாலர் சுதந்திர அரசராகத் தம்மை அறிவித்துக் கொண்டார். நமது படைத் தலைவர்கள் சிலரும் அவருக்குத் துணையாக நிற்கிறார்கள்.

அடங்கத் தொடங்கிய இளவரசியின் உக்கிரம் மீண்டும் எழுந்தது. காலைப் பலமாகத் தரையில் உதைத்து எழுந்தவள், "அத்தனை துணிவு வந்து விட்டதா கண்ட கோபாலனுக்கு?" என்று இரைந்தாள். அவளைக் கையமர்த்திய மன்னன் வீரனை நோக்கி, "மேலே சொல்" என்றான்.

"பிரபு, காஞ்சியின் காவற் படை தவிர இரண்டாயிரம் வீரர் கொண்ட படையும் திரட்டியிருக்கிறார் கண்ட கோபாலன்."

"அவ்வளவுதானா?" மன்னன் குரலில் சந்தேகம் தொனித்தது.

"காளத்தியிலும் மூவாயிரம் வீரர்களைக் கொண்ட பிரிவு ஒன்று, நாம் எதிர்க்க முற்பட்டால், தடுத்து நிறுத்தக் காத்திருக்கிறது."

மன்னனின் வலுவான கரங்கள் பின்புறமாகப் பிணைத்துக் கொண்டன. வல்லூறின் விழிகளைப் போல ஜொலித்த கூர்விழிகள் சாளரத்தின் வழியே எங்கோ வெறித்தன. அடர்ந்த புருவங்கள் ஒன்று கூடி, பலத்த சிந்தனையைக் காட்டின. அவ்ன் சிந்தனையினூடே புகுந்தது இளவரசியின் குரல்: "தந்தையே கண்ட கோபாலனுக்குத் திடீரென இத்தனை துணிவு எங்கிருந்து வந்தது?"

"இது திடீரென ஏற்பட்டதல்ல மகளே, துவக்கத்திலிருந்தே அவன் எண்ணம் சுதந்திரமான மன்னனாவதுதான். அவன் தாயாதி பொத்தப்பி மன்னனால் விரட்டப்பட்டு நம்மிடம் வந்து சேர்ந்தவனை, காஞ்சிக்குப் பிரதிநிதியாக அனுப்பியதுதான் நாம் செய்த தவறு. இப்போது மக்களின் ஆதரவில்லாவிட்டாலும் காஞ்சியில் வணிகர்களும், படைத் தலைவர்களும் ஆதரவாக நிற்பது அவனுக்குத் துணிவை அளித்திருக்கிறது. இந்த நிலையில் நாம் தாக்குதலைத் தொடங்குவது அதிக சேதத்தை ஏற்படுத்தும்" என்றவனின் புத்தியில் ஏதோ பளிச்சிட்டதற்கறிகுறியாக விழிகள் மின்னின. வீரனை நோக்கியவன், "வீரனே! சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் நிலைமை எப்படியிருக்கிறது?" என்றான் வேகத்துடன்.

*"பிரபு, பாண்டியர் கொங்கு நாட்டை முழுவதுமாக வசப்படுத்தி விட்டார்கள். ஆனால் கண்ணனூர்க் கோட்டையில் போசள சிங்கணன் இன்னுமிருக்கிறான்.

மன்னன் விழிகளில் சிந்தனை தீவிரமாக ஓடியது. "சொல் மேலே" என்றான் வீரனை வெறித்துப் பார்த்தபடி.

"சோழ நாட்டை நோக்கி பாண்டியர் படைகள் வரலாம் என்றும் நம்புகிறார்கள். காடவர்கள் மீண்டும் சேதிராயனுடனும் சம்புவரையனுடனும் பாண்டியர் படையெடுப்பை எதிர்பார்த்து, இணைந்திருக்கிறார்கள்.

இளவரசி குறுக்கிட்டாள்: "தந்தையே!"

"சொல் மகளே!"

"நாம் வடக்கில் யாதவரிடமிருந்தும் தாக்குதலை எதிர்பார்க்கிறோம் அல்லவா?"

"ஆம். அதிலும் நீ யாதவ கிருஷ்ணனைச் சிறையெடுக்க முயன்று, அவனும் தப்பியபின்பு போர் நிச்சயம்!"

"நாம் படைகளை வடக்கு எல்லையிலிருந்து திருப்புவது அபாயம் என்கிறீர்கள்.

"ஆம், நிச்சயமாக!"

"அப்படியானாலும் கூட, நம் படைகளை திசை திருப்பாமல் கண்ட கோபாலனை ஒடுக்க வழிகள் இருக்கின்றன தந்தையே" என்றாள் ருத்ராம்பாள்.

"அது என்ன வழி மகளே?" மன்னன் குரலில் வியப்பு தெரிந்தது.

"தந்தையே, பொத்தப்பி மன்னனால் ஆரம்பத்தில் விரட்டப்பட்டவன்தான் இந்த கண்ட கோபாலன் என்றீர்கள்."

"ஆம். பொத்தப்பி மன்னன் மன்மசித்தன் கண்டகோபாலனின் பரம எதிரி!"

"அவனை நாம் உபயோகப்படுத்திக் கொண்டால் என்ன?"

மன்னன் ஒரு கணம் திகைத்தான். "என்ன கூறுகிறாய் மகளே?" என்றான் சற்றுக் கழித்து.

"தந்தையே, நாம் நேரிடையாக கண்ட கோபாலனை இப்போது எதிர்க்க வேண்டாம். அவனும் அவன் படை பலமும் தற்போது பாண்டியரால் ஏற்படும் அபாயத்திலிருந்து நம்மைக் காக்கும் அரண். ஆனால் மன்மசித்தனை சற்றுத் தூண்டி விடுவதும், படை உதவி

* திருவந்திபுரம் கல்வெட்டுக்கள் (Epigraphica India. Vol. VII - Page 168.)



திருபர் : ரொம்ப தீவிரமான யோசனையா இருக்கீங்களே... அடுத்த படத்தைப் பற்றியா?

நடிகை : இல்லை. அடுத்த கணவரைப் பற்றி!

— பி.ஜி.பி. இசக்கி



யளிப்பதும், ஏற்கெனவே இருமுறை கண்ட கோபாலனிடம் தோற்ற மன்மசித்தனுக்குத் துணிவை அளிக்கும். தாயாதிகளின் போரில் எஞ்சியிருப்பவனை நம் பிரதிநிதியாகக் காஞ்சியில் வைத்துக் கொள்வோம். இதனால் நமக்கும் மக்களிடமிருந்தோ வணிகரிடமிருந்தோ எதிர்ப்பேதும் இருக்காது" என்றான் இளவரசி.

வேற்று நாட்டை ஆக்கிரமித்திருக்கும் போது, அந்த நாட்டின் உட்பகைகளை அவ்வப்பொழுது வளர்த்தும் தனக்குச் சாதகமானவர்களுக்கு உதவியும், ஒரு கட்டுக்குள் வைத்திருப்பது, ஆட்சியை அங்கு நிரந்தரமாக்கும் வழிகளில் ஒன்று. அர்த்த சாஸ்திரத்தின் இந்த ராஜ தந்திரத்தை அப்படியே செயல்படுத்தும் இளவரசியின் திட்டம் காகதிய மன்னனை பிரமிக்க வைத்ததால், அவன் ஏற்பாட்டுக்கு அப்போதே ஒப்புக் கொண்டான் அவன். உடனடியாக ஓலையொன்றுடன் படைப் பிரிவு ஒன்றையும் பொத்தப்பிக்கு அனுப்ப உத்தரவிட்டான். ஓலையை எழுதி, உபதலைவன் ஒருவனிடம் எடுத்துச் செல்லப் பணித்தவன் மீண்டும் இளவரசியை நோக்கித் திரும்பி, "மகளே, கண்ட கோபாலனின் நிலை, தெற்கில் போசளரின் நிலையையும், சோழ நாட்டின் நிலையையும் வைத்து மாறுபடவும் செய்யலாம் அல்லவா?" என்றான்.

"ஆம் தந்தையே! போசள சிங்கணன் கண்ணனூர்க் கோட்டையில் இன்னுமிருக்கிறான். அவனைக் கடந்துதான் பாண்டியர் சோழ நாட்டை அடைய முடியும். எதற்கும் நானே அதைக் கவனித்து உங்களுக்கு அறிவிக்கிறேன்" என்றான் ருத்ராம்பாள்.

உண்மையில் கண்ணனூர்க் கோட்டையில் சிங்கணனின் நிலை பெரும் சங்கடத்தில் தான் இருந்தது. கோட்டையின் உச்சியில் நின்று பார்வையை காவிரிக் கரை நோக்கிச் செலுத்தியவனுக்குக் காற்றில் தலையசைத்த நெற்கதிர்களோ, கூடு திரும்பிக் கொண்டிருந்த பட்சிகளின் இன்னிசையோ முதிர்ந்த நெல் மணத்துடன் வீசிக் கொண்டிருந்த மாலைக் காற்றோ சாந்தியை அளிக்கவில்லை. வெகு தூரத்தில் காவிரியின் வடகரையிலிருந்து அவ்வப்பொழுது கிளம்பிய புழுதி மண்டலமும், அவ்வப்பொழுது எதிரொலித்த போர்க்களிறுகளின் பிளிறல்களும் அவன் சித்தத்தில் பெரும் சிந்தனையைத் தூண்டியிருந்தன. பாண்டியரின் பாசறையை நெருங்க முயன்ற அவனது வீரர்களை நோக்கி, கரையோரத் தோப்புகளிலிருந்து அம்புகள் பறந்து வந்து அணுகவொட்டாமல் அடித்து விட்டன. எனவே வீரபாண்டியனின் படைகளைப் பற்றிய விவரமேதும் அறிந்து கொள்ள வாய்ப்புக் கிட்டவில்லை அவனுக்கு.

சிந்தனையில் ஆழ்ந்தபடியே தனது அறைக்குத் திரும்பியவனுக்கு, துணிவையும் ஆறுதலையும் அளிக்கக் கூடிய ஓலையொன்று காத்திருந்தது. போசள மன்னன் வீர சோமேஸ்வரன் படைத் தலைவர்களுடன் தலைநகரை விட்டுப் புறப்பட்டு விட்டதாகத் தெரிவித்த அந்த ஓலை அளித்த துணிவில், பாண்டியரின் தாக்குதலை எதிர் கொள்ளும் வழிகளைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தான் சிங்கணன்.

ஜடாவர்ம சுந்தர பாண்டியன் சேரருடன் நடத்திய போரில் யந்திரங்களையும் பொறிகளையும் பயன்படுத்திய விதங்களையும், போர்க்களிறுகளையும் வீரர்களையும் அணிவகுத்த முறைகளையும் நேரிடையாகக் கண்டிருந்தான் சிங்கணன். களிறுகளை எப்பொழுதும் பக்கவாட்டில் கொண்டு வரும் பாண்டியர் அணிவகுப்பை எதிர் கொள்ள, தகுந்த முன்னேற்பாடுகள் செய்து கொள்ளத்



"ஏன்யா கைதியைத் தப்பவிட்டே?"

"அவனைக் கைது செஞ்சு, ஜெயிலில் தள்ளினாலும் பலனிருக்காது, சார்! ஜெயில் அதிகாரிங்க கிட்ட மாமூல் கொடுத்துட்டு வெளியே தப்பிவிடுவான்! அதான் நானே மாமூலை வாங்கிட்டு தப்ப விட்டுட்டேன்!"

— பாலு

தீர்மானித்தான். தன் உபதலைவனை அழைத்து, படைப் பிரிவுடன் கிழக்கு வாயிலின் எதிரேயிருந்த மரக் கூட்டங்களில் மறைந்திருக்கவும், பக்கவாட்டில் வரும் யானைப் படையைக் கோட்டையை நெருங்குமுன் தாக்கவும் உத்தரவிட்டான். கோட்டைக்குள் எஞ்சியிருந்த வீரர்களைக் கொண்டு போராடுவதே உசிதமென்றும் மன்னன் படைகளுடன் வந்த பின்பு எதிர்த்தாக்குதல் நடத்தலாமென்றும் தீர்மானித்தான் சிங்கணன்.

இரண்டாவது தினம், வடக்கிலிருந்து போசளர் படைப் பிரிவு ஒன்று வந்து கொண்டிருப்பதாக, கோட்டைத் தலைவன் வந்து அறிவித்தான். மன்னனை வரவேற்க கோட்டை வாயிலுக்கு அதிவேகமாக வந்து நின்ற சிங்கணன், வந்த படைப்பிரிவில் மன்னன் வீர சோமேஸ்வரன் இல்லாததையும் அவனுக்குப் பதிலாக போசளர் பிரதான படைத் தலைவனான அப்பணன், குருதி படிந்த உடைகளுடனும் காயமடைந்த வீரர்களுடனும் வருவதைக் கண்டு திகைத்தான்.

கோட்டைக்குள் நுழைந்து சற்று ஆசுவாசப் படுத்திக் கொண்ட அப்பணன், நடந்தவற்றை விவரிக்க விவரிக்க, சிங்கணனின் தலை சுழலும் ஸ்திதிக்கே வந்தது. தானும் அப்பணனும் கண்ணனூர்க் கோட்டையிலிருக்கும் போசள வீரர்களும் சிக்கியிருக்கும் அபாயம் எத்தனை ஆழமானது என்பதும் புரிந்தது அவனுக்கு.

**கொ**ங்கு நாட்டின் வடக்கிலிருந்த கோட்டைகள் மட்டுமின்றி இடைப்பாடி நாட்டையும் சுந்தரபாண்டியன் கைப்பற்றி விட்டதையும் கொங்கு மக்களின் விடுதலைப் படைகளும், படைத்தலைவர் கிருஷ்ண மல்லரும் தொடுத்த அசுரத் தாக்குதலில் மன்னன் வீர சோமேஸ்வரன் பின் வாங்க நேரிட்டதையும், போசளர் படைப் பிரிவுகள் பல துண்டுகளாகச் சிதறடிக்கப்பட்டு பல திசைகளிலும் தாக்கப்பட்டதையும், தானும் தனது பிரிவுடன் தெற்கில் விரட்டப்பட்டதையும் விவரித்தான் அப்பணன்.

சிங்கணன் முகத்தில் ஈயாடவில்லை. "அப்படியானால் படைத் தலைவரே, அந்தக் கிருஷ்ணமல்லன் உங்களைப் பின் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறானா என்ன?" என்று கேட்டான்.

பலமாகத் தலையசைத்து மறுத்தான் அப்பணன். "இல்லை சிங்கணா, அந்த அரக்கன் பின் தொடரவில்லை. ஆனால் கண்ணனூர்க் கோட்டைக்கு மூன்றுகாத தூரமிருக்கையில் கொங்கு நாட்டின் கிழக்கு எல்லையிலிருந்து பாண்டிய இளவல் ஆதித்யன் எங்களை வழி மறித்துத் தாக்கினான். மன்னனைப் போல நமது படைப்பிரிவை ஊடுருவிய அவன் புரவிப்படை, பாதிக்குமேல் அழித்துவிட்டு எதிர்ப்புறமாகச் சென்று விட்டது. நமக்கு வடகிழக்கில் ஆதித்யனும், நேர்வடக்கிலிருந்து கிருஷ்ணமல்லனும் வந்து கொண்டிருக்கிறார்கள்."

"அப்படியானால் நாம் மூன்று பக்கங்களிலும் சூழப்பட்டிருக்கிறோமா?" என்ற சிங்கணன் முகத்தில் கவலை தெரிந்தது.

"ஆம் சிங்கணா, ஆனால் யார் நம்மை முதலில் தாக்கப் போகிறார்கள் என்பதோ, பாண்டியரின் உத்தேசம் என்னவென்பதோ விளங்கவில்லை" என்ற அப்பணன், சற்று நேரம் மௌனம் சாதித்தான். தமிழகத்திலிருந்து போசளர் ஆதிக்கம் வேரோடு கிள்ளியெறியப் படப் போவது நன்றாகப் புரிந்தது அவனுக்கு. வறண்ட முறுவல் ஒன்றுடன் எழுந்தவன் கால்களைத் திடமாக ஊன்றி நின்றான். அடுத்து ஒலித்த அவன் சொற்களிலும் திடமிருந்தது: "சிங்கணா, வீரர்களை அணிவகுக்க உத்தரவிடு."

சிங்கணன் முகம் மாறியது. "எதற்கு படைத் தலைவரே?" என்றான் குரலில் சந்தேகமும் கலக்கமும் ஒலிக்க.

அப்பணன் பதில் தெளிவாக வந்தது. "கோட்டையில் அடைபட்டுக் கிடக்க நான் விரும்பவில்லை, சிங்கணா. தலைநகர் திரும்பவும் வழியில்லை. வீரபாண்டியனை எதிர்கொண்டு போரில் வீரனாகவே மடிய விரும்புகிறேன்," என்றான் அப்பணன் திடமாக. வாயிலிலிருந்த வீரனை அழைத்து, உபதலைவர்களை அழைத்து வரவும் ஆணையிட்டான்.

சிங்கணனின் மறுப்பும் வேண்டுகோளும் பயனளிக்கவில்லை. "படைத்தலைவரே! நான் கூறுவதை சற்றுக் கேளுங்கள். நாம் வெளியேறிப் போரிடுவது அபாயகரமானது. கோட்டைக்குள்ளிருந்து போரிடுவதுதான் நமக்கும் நம் வீரர்களுக்கும் பாதுகாப்பு. சற்று நிதானியுங்கள்" என்ற சிங்கணன் குரலில் கெஞ்சல் இருந்தது.

படைத்தலைவன் சிங்கணன் மீது வெறுப்பு வழிந்த விழிகளைத் திருப்பினான். "சிங்கணா, உனக்கு உயிர்பிழைக்க ஆசையிருந்தால், இப்பொழுதே வெளியேறி விடு. கிழக்கே கங்க நாட்டு எல்லையோரமாகச் சென்றால் உயிர் பிழைக்க சந்தர்ப்பம் உண்டு. நான் வீரபாண்டியனை எதிர் கொள்ளத் தீர்மானித்து விட்டேன்," என்ற அவன் சொற்களிலும் வெறுப்பு தொனித்தது.

அப்பணன் உத்தரவின்படி அங்கு வந்து கொண்டிருந்த போசள உபதலைவர்களை விலக்கிக் கொண்டு வீரன் ஒருவன் தலை தெறிக்க ஓடி வந்தான். "படைத்தலைவரே! படைத்தலைவரே! வீரபாண்டியன் படைகளுடன் கோட்டையை நோக்கி வந்து கொண்டிருக்கிறான்!" என்று அறிவித்தான் மூச்சிரைக்க!

சிங்கணனுடன் கோட்டை மதிலுக்கு அவசரமாக விரைந்து வந்து நின்ற அப்பணன், எதிரே விரிந்த காட்சியைக் கண்டு பிரமித்தான். முன்னால் யந்திரப் பொறிகளுடனும், பக்கவாட்டில் போர்க்களிறுகளுடனும் இடது புறத்தில் புரவி வீரர்களுடனும் அணிவகுத்திருந்த பாண்டியர் படை, கண்ணனூர்க் கோட்டையை விழுங்க வரும் பெரும் கால சர்ப்பம் போல் நிதானமாக நெருங்கிக் கொண்டிருந்தது.

(தொடரும்)



"எங்க வீட்டுக்கு இன்னிக்கு வேலைக்காரி வரலை. உங்க வீட்டு வேலைக்காரியை இன்னிக்கு மட்டும் அனுப்பேன்...."

"வெரி ஸாரி. எங்க வீட்டுக்காரர் மத்தவங்க வீட்டுக்கு இதுவரை வேலைக்குப் போனதில்லை!"

— சிரிசிரி முரளி

# பித்ருக்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

**திருமண வைபவங்களுக்கு:**

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை - 20
போன் : 4915662
4914213

**சினிமா தொழிலாளர்களுக்கும் பட தயாரிப்பாளர்களுக்கும் இடையே அடிக்கடி பிரச்னைகள் வருவது சகஜமாகிவிட்டது. அண்மையில் நடந்த வேலை நிறுத்தத்தை முதல்வர் கலைஞர் தலையிட்டுப் பேச்சுவார்த்தைகள் நடத்தி ஒரு சுமுகமான நிலையை ஏற்படுத்தியிருக்கிறார். இப்போது நிலைமை சகஜமாகிவிட்டாலும் சினிமா தொழிலாளர்கள் அப்படி என் னென்ன பிரச்னைகளுக்காக வேலை நிறுத்தம் செய்தார்கள். அதை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்....**

சினிமா தயாரிப்பாளர்களுக்கும் தொழிலாளர்களுக்குமிடையிலான ஊதிய உயர்வுப் பிரச்னையால், முதலில் தயாரிப்பாளர்கள் படத் தயாரிப்பை நிறுத்தி விட்டதாக அறிவித்தார்கள். பிறகு சினிமா தொழிலாளர்களும் வேலை நிறுத்தத்தை அறிவித்தார்கள். இந்தத் திடீர் அறிவிப்புகளின் பின்னணி பற்றி, சம்பந்தப்பட்ட பலரையும் சந்தித்துப் பேசினோம்...

• கேயார்



"உதாரணத்துக்கு ஒன்று சொல்கிறேன்..." என்று ஆரம்பித்தார், தென்னிந்திய திரைப்படத் தொழிலாளர்கள் சம்மேளனத்தின் தலைவரும் ஸ்டண்ட் யூனியன் தலைவருமான எஸ். விஜயன்.

"சென்னையில் எடுக்கப்பட்ட ஒரு தமிழ்ப் படத்திற்கு பம்பாயிலிருந்து மூன்று கேமரா அசிஸ்டெண்டுகள் அழைத்து வரப்பட்டார்கள். அந்த மூவருக்கும் ஒருநாள் சம்பளம் 2,600 ரூபாய். அதே வேலைக்கு இங்குள்ள கேமரா அசிஸ்டெண்டுகள் இருவருக்கான சம்பளம் என்ன தெரியுமா? வெறும் 190 ரூபாய் தான்!

"இங்குள்ள லைட்மேன்கள் ஒவ்வொரு நாளும் சுமார் பதினாறு மணி நேரமாவது பாடுபடுகிறார்கள். ஆனால் கொடுக்கப்படுகிற சம்பளம் (75 ரூபாய்) 12 மணி நேரத்துக்குத்தான்! மீதி நான்கு மணி நேரத்திற்கும் சேர்த்துச் சம்பளம் கொடுங்கள் என்கிறோம் அவ்வளவு தான்!

"புரடெக்ஷன் அசிஸ்டெண்டுகள் அதிகாலை மூன்று மணிக்கே எழுந்து பெட்காப்பி, டிபன், சாப்பாடு... என்று அனைவருக்கும் வாங்கிக் கொண்டு வந்து பரிமாறி விட்டு அன்றைய பொழுதுக்கான வேலை முடித்து படுக்கச் செல்லும் போது நள்ளிரவு பன்னிரண்டு மணியாகி விடும். அதனால் அவர்களுடைய ஒருநாள் கால்ஷீட்டை ஒன்றரை நாள் கால்ஷீட்டாகக் கணக்கிட்டுச் சம்பளம் கொடுங்கள் என்கிறோம்.

"வழக்கமாக, மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை நாங்களும் பிலிம் சேம்பரும் சேர்ந்து தயாரிப்பாளர்களுடன் பேசி ஊதிய உயர்வை நிர்ணயிப்போம். ஆனால், கடைசியாக நடந்த பேச்சு வார்த்தைக்கு எங்களை அழைக்கவில்லை. ஆதலால்தான் நாங்களாகவே ஓர் ஊதியத்தை நிர்ணயம் செய்து, அதைக் கொடுக்கும் தயாரிப்பாளர்களின் படங்களில் மட்டும்தான் வேலை செய்வோம் என்று அறிவித்தோம். இதைக் கேட்டதுப் தயாரிப்பாளர்கள்



• எஸ். விஜயன்

• மன்சூர் அலிகான்



படத் தயாரிப்பை நிறுத்தி விட்டதாக அறிவித்தார்கள் அதன் பிறகுதான 'வேலை நிறுத்தமே செய்ய மாட்டோம்' என்று அறிவித்திருந்த நாங்களும் மே மாதத்திலிருந்து வேலை நிறுத்தத்தை அறிவிக்க வேண்டியதாகி விட்டது!" என்றவர், "ஸ்டண்ட் தொழிலாளர்களின் நிலையும் மிகவும் பரிதாபகரமானது தான்!" என்று அவர்களுடைய கஷ்டங்களையும் விளக்கினார்.

"93-ம் ஆண்டு வரை எங்கள் ஸ்டண்ட் தொழிலாளர்களுக்கான வேலை நேரம் எட்டு மணி நேரமாகத்தான் இருந்தது. ஆனால் சிறு தயாரிப்பாளர்களுக்கு உதவியாக இருக்கட்டுமே என்கிற நல்லெண்ணத்தில் 12 மணி நேரமாக மாற்றச் சம்மதித்தோம் பாருங்கள், அங்கேதான் நாங்கள் தவறு செய்து விட்டோம்! ஆம்; எட்டு மணி நேரத்துக்கு மேலும் தொடர்ந்து வேலை செய்கிற போது ஏற்படும் களைப்பாலும் அயற்சியாலும் விபத்துகள் அதிகம் ஏற்படும் வாய்ப்பு ஏற்பட்டு விடுகிறது. அப்படி அநியாயமாக ஐந்து உயிர்களைப் பறிகொடுத்துமிருக்கிறோம்!

"இப்படி உயிரைக் கொடுத்துச் செய்யும் வேலை என்பதால்தான் தற்போதைய ஒருநாள் சம்பளமான ஆயிரம் ரூபாய் போதாது, நாற்பது சதம் உயர்த்திக் கொடுங்கள் என்று கேட்கிறோம். தொடர்ந்து ஸ்டண்ட் வேலைகளே செய்து கொண்டிருக்கிறபோது, அங்கங்கே அடி படுவதால் மருத்துவச் சிகிச்சைக்கும் நாங்கள் தான் சொந்தக் காசை செலவு பண்ண வேண்டியிருக்கிற நிலையில், எங்கள் கோரிக்கை மிகவும் நியாயமானதுதான்!" என்கிறார் விஜயன்.

(அப்படி விபத்து நேர்ந்து ஒரு ஸ்டண்ட் கலைஞர் இறக்க நேர்ந்தால் முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து ஒரு லட்ச ரூபாயும், மீண்டும் ஸ்டண்ட் வேலை செய்ய இயலாமல் போகிறபோது ஐம்பதாயிரம் ரூபாயும் தரப்படும் என்று முதல்வர் அறிவித்திருக்கிறார். மருத்துவச் செலவுகளையும் அரசே ஏற்கும் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.)

தயாரிப்பாளர்கள் சார்பில் என்ன சொல்லுகிறார்கள்? தயாரிப்பாளர்களான கேயார், வி. நடராஜன், கே. பிரபாகரன், செவன்த்சானல் நாராயணன் ஆகிய பலரையும் சந்தித்துப் பேசிய போது ஏறத்தாழ அனைவருமே ஒரேவிதமான கருத்தைத் தான் சொன்னார்கள்.

"சினிமா நட்சத்திரங்களும், தயாரிப்பாளர்களும் எக்கச்சக்கமாகச் சம்பாதிக்கிறார்களே என்கிற எண்ணம் பரவலாக இருப்பது தவறு. எல்லா நட்சத்திரங்களும் ஒரே மாதிரி சம்பாதிப்பதில்லை. எல்லாப் படங்களுமே வெற்றிப் படங்களாவதுமில்லை. இன்று பெரிய நட்சத்திரங்களாக இருப்பவர்கள் எத்தனை நாளைக்கு அப்படியே இருப்பார்கள் என்றும் சொல்லி விட முடியாது!

"ஆனால் சினிமா தொழிலாளர்களின் நிலை அப்படிப்பட்டதல்ல. அன்றைக்கு எம்.ஜி.ஆர். படங்களுக்கு லைட்மேனாக இருந்தவர், இன்றைக்கும் தொடர்ந்து லைட்மேனாகவே இருக்கிறார். தோல்விப் படத்தயாரிப்பாளர்கள் காணாமல் போகிற மாதிரி, நட்சத்திரங்கள் மார்க்கெட் இழந்து போகிற மாதிரி, இவர்களில் யாரும் வேலையை இழந்து விடுவதில்லை!" என்கிற கருத்துத்தான் அது.

நட்சத்திரங்களான மன்சூர் அலிகானும் குஷ்பூவும் கூட இதே மாதிரியான கருத்தைத் தான் சொல்கிறார்கள்! கூடவே, அனைவரும் சினிமா தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளை உணர்ந்தும் இருக்கிறார்கள். இருந்தபோதிலும் அடிக்கடி பிரச்னைகள் எழுவதற்கு என்ன காரணம்? நட்சத்திரங்களும் தயாரிப்பாளர்களும் லட்சக் கணக்கில் சம்பாதிக்கிற போது, இவர்கள் அதிகபட்சமாக ஆயிரம் ரூபாய்தான் வாங்குகிறார்கள் என்கிற வர்க்க வேறுபாடுதான்! இது மாதிரி வேறுபாடுகள் இனி எழாத வண்ணம், இரு தரப்பினருமே ஒருவர் கஷ்டத்தை மற்றவர் உணர்ந்து நடந்து கொள்வதுதான் நிரந்தரத் தீர்வாக அமையும்.

— கே. எஸ். இளமதி


• குஷ்பூ

# கனவுத் தொழிற்சாலையில் நடந்தது என்ன?



'இன்று முதல் அவசர ஓட்டமில்லை!' காலையில் கண் விழித்ததும் மனதில் எழுந்த முதல் எண்ணம்! நினைக்கவே சுகமாயிருந்தது.

கண் விழித்ததுமே வந்து ஒட்டிக் கொள்ளும் பரபரப்பை அப்புறப் படுத்தி சோம்பல் முறித்தேன்.

நேற்றோடு அலுவலகத்தில் மாலை போட்டு மகாத்மா, மாவீரன் என்று கூசாமல் புளுகி, சென்றுவா மகனே சென்றுவா என்று அனுப்பி விட்டார்கள்.

காயத்ரி சமையலறையில் மிக்சியை ஓட்டுவது காதில் விழுந்தது. பாவம், அவளுக்குத்தான் ரிடையர் மெண்டே கிடையாது.

# புது

மகன் இருக்கிறான், மகள் இருக்கிறாள். வேலைக்கும் காலேஜுக்கும் ஓடும் அவர்களுக்காக இவள் சுழன்றே ஆக வேண்டும்.

"என்னப்பா, ரிடையர்டு லைஃபா? என்ஜாய்!" என்றான் சுந்தர். பாதி ஷேவிங்கில் இருந்தான்.

'டேப் ரிகார்டரில் ஏதாவது பக்திப் பாடலைப் போட்டால் என்ன?'

சிந்தனையை செயல்படுத்தினேன்.

"கற்பனை என்றாலும், கற்சிலை என்றாலும் கந்தனே, உனை மறவேன்."

டி.எம்.எஸ்.குரல் நின்று விட்டதே. ஏன்?

டூத் பிரஷ்ஷை பிடித்தபடி மீண்டும் ஹாலுக்கு வந்தேன்

"காலையிலேயே இதைக் கத்த விடாதீங்க. ஒரு வேலையும் ஓடாது. ஏய் ரேணு, குக்கரில் வெயிட் போடு."

காயத்ரியின் அதட்டலில் சுருங்கிப் போனேன். பிறகு, மனசு சமாதானம் ஆனது. பரவாயில்லை. பாட்டு இல்லாவிட்டால் என்ன?

"காயத்ரி, காப்பி வேணுமே."

"போச்சுடா! ஏன்

வேட்டாய் எழுந்திங்க. நாங்க வழக்கம் போல அஞ்சரைக்கு எழுந்து, கலந்து குடிச்சாச்சு. குக்கரை இறக்கினதும் தரேன்."

பல் தேய்த்தவுடன், காப்பியின் கசப்பை உணர்ந்தே பழக்கப்பட்ட நாக்கு கெஞ்சியது. இல்லாவிட்டால் தலைவலி வந்துவிடும் எனக்கு.

ஒரு காப்பிக்குக் கூட கெஞ்ச வேண்டுமா?

பொருமிய மனதை, ஹிண்டுவில் திருப்ப முயன்றேன். அடம் செய்தது நாக்கு.

"பற்றாக்குறை விகிதம் பாதாளத்தை நோக்கிப் போகுதே இப்படி."

மனசு பதைக்க படிக்கும்போது, பேப்பர் பிடுங்கப்பட்டது.

"அப்பா, இது என் நேரம். காலையில் ஆறி லிருந்து ஆறரை வரைதானே உங்க டைம்."

# கிருஷ்ணா

ரேணுகா பிடுங்கிக் கொண்டாள் தினசரியை.

"மோனிகா செலஸ் ஜெயிப்பாளா? அட, கிரிக்கெட் டீமில் தமிழ்நாட்டு ப்ளேயர் கூட செலக்ட் பண்ணியிருக்காங்களே! ஆச்சரியம் தான்."

அடுத்து என்ன செய்வது என்று புரியாமல் வாசலுக்குப் போனேன்.

"வெந்நீர் ரெடி. போய் குளிங்க."

கறிகாய்க்காரனிடம் பேரம் முடிந்து, காய்கறிக் கூடையுடன் வந்தாள் காயத்ரி.

"என்ன அவசரம்? கொஞ்ச நேரம் போகட்டுமே."

# செக்ஷன்



"வெந்நீர் தயாராயிருக்கே. மறுபடியும் கெய்சர் போட்டு... அநாவசிய மின்சாரம். முதல்ல குளிங்க."

"காப்பி குடிக்கலியே."

"குளிச்சுட்டுத்தான் குடிங்களேன்."

பாத்ரூமுக்குள் புகுந்தேன். வேறு வழியில்லை.

"நீங்களும் டிபன் சாப்பிட்டுடுங்களேன்."

"அப்புறமாய் காயத்ரி! ஆபீஸ் போறப்பதான் டிபனிலே கண் விழிக்கற டூட்டி. இப்ப என்ன?"

"நான் ரேஷன் கடை வரைக்கும் போகணும்."

"பரவாயில்லே. நானே போட்டு சாப்பிட்டுக்கறேன்."

எரிச்சலுடன் பார்த்தாள் காயத்ரி.

"நீங்க போட்டுக்கற லட்சணம் தெரியாதா? ஒழுங்காய் சாப்பிட்டுக்க மாட்டீங்க. உட்காருங்க."

அவன் சிபாரிசுக்கு சுந்தர் வந்தான்.

"குழந்தை மாதிரி என்னப்பா முரண்டு. அம்மா சொல்றதைத்தான் கேளுங்களேன்."

தின்று தொலைத்தேன். நான் கை கழுவும் முன்னே மூவரும் காணாமல் போய் விட்டனர். டேபிளில் சூடாய் காப்பி. இரண்டாம் டோஸ் டிகாக்ஷனா, ருசியையே காணோம். கழனித் தண்ணீர்!

அடுத்து என்ன செய்வது? தினசரியைப் புரட்ட போரடித்தது.

வாசலுக்கும், கொல்லைக்குமாய் அலைந்தேன். தோட்டத்தைச் சுற்றி வந்தேன்.

"மெழுகின இடம் பூரா திட்டுத் திட்டா காலடி. உங்க வேலையா இது. ப்ச்."

என் வீட்டில் நான் நடக்கக் கூட சுதந்திரமில்லையா?

குமைந்து போனேன்.

கேபிள் டீ.வியை 'ஆன்' செய்தேன். வழக்கமான ஆட்டம். தாவணி, சேலையையெல்லாம் சினிமாவில் அணியத் தடை செய்து விட்டார்களா என்ன?

அடுத்த சேனல் மாற்றினேன்.

"எனக்குத் தலைவலி. வெயிலில் போயிட்டு வந்ததுல ரெண்டு பொட்டும் தெறிக்குது. டீ.வி. சனியனை அணைச்சுடுங்களேன்."

ஹாலில், 'பள்ளி கொண்டவளை' கோபமாய் பார்த்தேன்.

யாரை சனியன் என்கிறாள் என்று குழப்பமாய் இருந்தது.

"நீ போய் ரூமில் படுத்துக்கயேன் காயத்ரி."

"கட்டிலிலா? விழுப்பாயிடும் மெத்தையிலே படுத்தா."

அமிர்தாஞ்சனை தடவிக் கொண்டபடி கண்ணை மூடினாள்.

டீ.வியை மூடினேன். செய்வதறியாமல் திண்டாடினேன்.

முதன்முதலாய் ரிடையர்டு வாழ்க்கை மீது பயம் வந்தது.

'ஹா, நான் எதுக்கு வேற எங்கேயாவது வேலைக்குப் போகணும் மறுபடியும்? சொந்த வீடு, பாங்க் பாலன்ஸ், பென்ஷன்! நிம்மதியாய், வாழ்க்கையோட ஒவ்வொரு வினாடியையும் அனுபவிக்கப்போறேன்.'

பொறாமையாய்ப் பார்த்த ஆபீஸ்

## அருள்வாக்கு

**ஜலத்துக்கு நிறைவு சமுத்திரம். தம்ளரில், செம்பில், குடத்தில், அண்டாவில், கிணற்றில், குளத்தில், நதியில் என்று ஒன்றைவிட ஒன்று ஜாஸ்தியாக இருக்கிற ஜலம் கடைசியில் சமுத்திரம் என்று முடிகிறது. இப்படியே ஞானத்துக்கும், கிருபைக்கும் நிறைவான சமுத்திரம் பராசக்தி. நமக்குக் கொஞ்சம் அறிவு, கொஞ்சம் அன்பு இருக்கிறது. பிராணிகளுக்கு நம்மை விடக் குறைவு. நம்மை விட ஜாஸ்தி அறிவுள்ள, ஜாஸ்தி கிருபா சக்தி உள்ள தேவ ஜாதிகள் இருக்கின்றன. நம்மிலேயே மஹான்களானவர்கள் மகாஞானிகளாக, பரம காருண்யத்தோடு இருக்கிறார்கள். இந்த ஞானம், கிருபை பூரணமாக நிறைந்த இடத்தைத்தான் ஸ்வாமி, பரமாத்மா, பராசக்தி என்று சொல்வது.**

## ஜனநாயகச் சந்தையில்...

**சிறகுகள் விற்று —**
**சுதந்தரம்.**
**கண்களை விற்று —**
**காட்சிப் பொருட்கள்**
**மூட்டை தூக்கி —**
**கல்வி.**
**சங்கீதத்தை விற்று —**
**சப்தங்கள்.**
**ஆடைகளை விற்று —**
**நாகரிகம்.**
**வோட்டுக்களை விற்று —**
**அரசு!**
**உயிர்களைக் கொடுத்து**
**அமைதி.**

**— புவனகிரி கல்யாணசுந்தரம்.**

எல்லாவற்றையும் அறிகிற ஞானம் அது; அறிகிறது மட்டுமில்லை, அறியப்படுகிற எல்லாமுமே அதுதான். அதற்கு வேறாக இன்னொன்று இருந்து, அதை இது அறிகிறது என்றில்லை. அப்படி இன்னொன்று இருப்பதற்கு இடம் இருந்து விட்டால், இது எங்கும் நிறைந்த பூரணம் ஆகாது. இன்னொன்று துளித்துளி இருந்துவிட்டால் கூடச் சரி, இதற்குக் குறைதான் - இது அந்தத் துளியில் இல்லாததால் இது பூரணமில்லை, நிறைந்த ஒரே நிறைவில்லை என்று தானே அர்த்தம்? இதனால் என்ன முடிவாகிறது என்றால், பரமாத்மாவைத் தவிர அறியப்படுகிற வஸ்து என்று இரண்டாவது பதார்த்தமே கிடையாது என்பது தான்.



அப்படியானால் இத்தனை ஜீவாத்மாக்கள் வேறு வேறாக இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறோமே இது என்ன? இது ஒரு பெரிய வேஷம்தான், மாயா நாடகம்தான். வேஷம் கலைந்து விட்டால், நிறைந்த நிறைவான ஒன்றே ஒன்றுதான், அதுவே அறிவாக நிற்கும். 'சித்தமிசை குடி கொண்ட அறிவான தெய்வமே' என்று தாயுமான ஸ்வாமிகள் சொல்கிற அறிவு!

அது பூரணமானதால், அதனால் அறியப்பட வேண்டிய வஸ்து என்று வேறு எதுவுமே இல்லை. தன்னையே அறிந்து கொண்டிருக்கிற அறிவு அது.

இப்படி இரண்டாவதாக வேறே இல்லாமல் ஜீவாத்மாவை அந்தப் பரமாத்ம சமுத்திரத்தில் கொண்டு போய்க் கரைப்பதுதான் வாஸ்தவமான நிறைவு.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

தோழர்களிடம் ஜம்பம் அடித்தது ஞாபகம் வந்தது.

"கொஞ்ச நேரம் தூங்குங்களேன். குட்டி போட்ட பூனை மாதிரி என்ன நடை இது?"

தூக்கம் வராமல் வெறுமனே படுத்திருப்பது பெரிய கொடுமை என்பதை உணர முடிந்தது.

**சா**யந்திரம் ஆனதும் நாலு கால் பாய்ச்சலில் வீட்டை விட்டு வெளியே வந்தேன்.

மூச்சு முட்டும் அடிமைத் தளையிலிருந்து விடுபட்ட சுதந்திரம்.

காலை கண்விழித்ததும் ஆபீஸ் கிளம்பும் பரபரப்பு, பிறகு ஆபீஸ் கலகலப்பு, மாலையில் பூங்காவில் நண்பர்களுடன் ஒரு மணி நேர அரட்டை, வீடு திரும்பி, சாப்பிட்டு, கொஞ்ச நேரம் டீ.வி.யில் மூழ்கி, தூக்கம்.

இதுதான் எனக்குச் சரிப்பட்டு வரும். வீட்டில் எனக்குச் சுதந்திரமேயில்லை. அது சிறை. காயத்ரிதான் வார்டன்.

"என்னப்பா எப்படிப் போச்சு பொழுது?"

"ஐயோ, போர்! ஏதாவது ஒரு வேலை தேடணும். சம்பளம் முக்கியமில்லை" என்றேன், பூங்கா நண்பரிடம்.

"கவலைப்படாதே! நாளைக்கு எங்க கிட் பஃண்டுக்கு வா. அறுநூறு ரூபா சம்பளம். கணக்கெழுதணும். பரவாயில்லையா?"

"தாராளமாய்" என்றேன் உற்சாகமாய். சம்பளமே தராவிட்டாலும் பரவாயில்லை.

பழைய உல்லாசம் மனத்தில் தொற்றிக் கொள்ள வீடு திரும்பினேன்.

"நாளைமுதல் நான் மறுபடியும் வேலைக்குப் போறேன்" என்றேன்.

"எதுக்கு?"

காயத்ரியிடம் எப்படிச் சொல்ல? உண்மையான காரணம் சொன்னால் பொல்லாப்பு!

"அது... போரடிக்குது வீட்டுல."

"அதுதான் காரணமா? இல்லை, புது செக்ஷனில், புது ஆபீசர் கீழே வேலை பார்க்கற மாதிரி திண்டாட்டமாய் இருக்கா?" என்றாள் அமைதியாய்.

கள்ளி! கண்டு பிடித்துவிட்டாளே!

"சட்டுனு மாற்றத்தை ஏத்துக்க முடியாது தான் மனசளவில். நாலு வருஷம் முன்னே புது செக்ஷனுக்கு உங்களை மாத்தினப்ப இப்படித்தானே தடுமாறுனீங்க. அப்புறம் பழகிப் போகலையா? அது மாதிரிதான் இதுவும்" என்றாள் புன்னகையுடன்.

"அது வந்து..."

"புரியுது. ஆபீஸ் வேற, வீடு வேறன்னு சொல்லப்போறீங்க. எல்லாம் ஒண்ணுதாங்க. உங்க ஈடுபாடு தான் எங்கேயும் முக்கியம். வீட்டிலே உங்களை ஈடுபடுத்திக்குங்க. செடிக்கு தண்ணி விடலாம். எனக்குக் காய்கறி நறுக்கித் தரலாம். ரேஷன் கடைக்குப் போகலாம். ஏன், பேப்பரில் படிச்சதை எனக்குச் சொல்லலாமே? இங்கிலீஷ் படிக்கத் தெரியாதே எனக்கு. ஒத்த வயசுல, விஷயங்களைப் பகிர்ந்துக்க, எனக்கும் வேற யாரு இருக்கா?"

அவள் பேச்சிலிருந்த நியாயம் என்னை உருக்கி விட்டது. "சரியா, நான் சொல்றது? சரி, சாப்பிட வாங்க..."

"நீ குழம்பு, ரசத்தை எடுத்து வை. காயத்ரி. நான் தட்டை எடுத்துட்டு வரேன்... ஊறுகாய் ஃப்ரிட்ஜிலதானே இருக்கு."

செயலில் இறங்கி விட்டேன்!



# விபரீதத் தலைவலி; விளம்பரச் சண்டை!

**தலைவலி மாத்திரைத் தயாரிப்பாளர்களின் விளம்பரச் சண்டையால் இப்போது அமெரிக்கர்களுக்கு புதிதாக ஒரு தலைவலி தோன்றியிருக்கிறது...**

இலேசான தலைவலி என்றால் கூட டக்கென்று ஒரு தலைவலி மாத்திரையை உள்ளே விழுங்குவதில் நம்மை விட அமெரிக்கர்கள் கைதேர்ந்தவர்கள்! ஆண்டுக்கு இருபத்தேழு கோடி என்கிற அளவில் தலைவலி மாத்திரைகள் அங்கு விற்றுத் தீர்கின்றன.

இந்த நிலையில் தலைவலி நிவாரணி மார்க்கெட்டில் அங்கு லீடராக விளங்கும் ஜான்சன் அண்ட் ஜான்சன் நிறுவனத்திற்கும், அடுத்த இடத்தைப் பிடித்திருக்கும் அமெரிக்கன் ஹோம் ப்ராடக்ட்ஸ் நிறுவனத்துக்குமிடையே ஏற்பட்டிருக்கும் தகராறு, வியாபார ஒழுக்கங்களைத் தகர்த்ததோடு, மருத்துவ சந்தேகங்களையும் தட்டி எழுப்பியிருக்கிறது.

"இபுப்ரோஃபின் அடங்கிய தலைவலி மாத்திரைகளை உட்கொள்வது நல்லதல்ல. அதிக ரத்த அழுத்தத்திற்காகவும், அல்சருக்காகவும் சிகிச்சை எடுத்துக் கொள்பவர்கள் இந்த வகை வலிநிவாரணிகளை உட்கொள்ளக் கூடாது." இப்படி ஒரு விளம்பரத்தை வெளியிட்டது ஜான்சன் அண்ட் ஜான்சன்.

பொங்கியெழுந்தது அமெரிக்கன் ஹோம் ப்ராடக்ட்ஸ் நிறுவனம். காரணம், இது தயாரிக்கும் மாத்திரையில் முக்கியப் பங்கு வகிப்பது இபுப்ரோஃபின்தான். 1994 'வாஷிங்டன் டைம்ஸ்' இதழொன்றில் வெளியாகியிருந்த பௌடி என்பவர் எழுதியிருந்த திறந்த கடிதமொன்றைத் தூசி தட்டி எடுத்துத் தன் விளம்பரத்திற்குப் பயன்படுத்திக் கொண்டது.

பௌடி, முன்னாள் அமெரிக்க அதிபர் ஜார்ஜ் புஷ்ஷிடம் செயலாளராகப் பணி புரிந்தவர். தினமும் இரவில் இரண்டு அல்லது மூன்று கிளாஸ் ஒயின் அருந்தும் பழக்கம் கொண்ட இவர் 'டைலனால்' மாத்திரையைத் தொடர்ந்து உட்கொண்டார். கல்லீரல் பெரும் பாதிப்பை அடைந்து, மாற்று கல்லீரல் பொருத்திக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது.

டைலனால் தயாரிக்கும் ஜான்சன் நிறுவனத்தின் மீது இவர் வழக்குத் தொடுக்க, அவருக்கு 88 லட்சம் டாலரை நஷ்டஈடாக அந்த நிறுவனம் வழங்க வேண்டுமென்று தீர்ப்புக் கூறியது நீதிமன்றம்!

இதைத் தொடர்ந்து டைலனால் நிவாரணியின் உறையின்மீது "தினமும் இரண்டு கிளாஸு"க்கு மேல் ஒயின் அருந்துபவர்கள் மருத்துவரைக் கலந்தாலோசித்து விட்டு இந்த மாத்திரையை உட்கொள்ளவும்" என்று அச்சிட்டது ஜான்சன் நிறுவனம்.

தன் பாதிப்பு மக்களுக்கு எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என எண்ணி பௌடி எழுதி வாஷிங்டன் டைம்ஸ் இதழில் வெளியான அந்தக் கடிதத்தைத்தான் போட்டி நிறுவனம் 'நியூ யார்க் டைம்ஸ்' இதழில் (வாஷிங்டன் டைம்ஸை விட பத்து மடங்கு அதிக விற்பனை கொண்டது). பிரசுரித்தது.

பத்திரிகைகளில் மட்டுமல்ல, தொலைக்காட்சியிலும் இரு நிறுவனங்களும் சகட்டுமேனிக்கு ஒருவரையொருவர் விளம்பரங்களின் மூலம் தாக்கிக் கொள்ள, ஏ.பி.ஸி. உட்பட பல தனியார் தொலைக்காட்சிகள் இதுபோன்ற தாக்குதல் விளம்பரங்களை ஒளிபரப்பத் தடை விதித்திருக்கின்றன.

சாதாரண தலைவலி நிவாரணிகள் கடுமையான பாதிப்புகளையெல்லாம் ஏற்படுத்துமா என்று மலைத்துப் போன மக்களில் பலர் "தலைவலி பாட்டுக்கு இருக்கட்டும்; மாத்திரைகள் சாப்பிடுவதால் ஏற்படும் திருகுவலி வேண்டாம்" என்ற முடிவுக்கு வேகமாக வந்து கொண்டிருக்கிறார்களாம்!

**- ஜி.எஸ்.எஸ்.**

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.




# யூடிஐ அறிமுகம் செய்யும் ஈக்விட்டி ஆப்பர்சுனிட்டி ஃபண்டு. நீங்கள் பொன்னான வாய்ப்பை நழுவ விடாதிருக்க உறுதிசெய்கிறது இந்த உன்னதமான முதலீட்டு வாய்ப்பு.

வாய்ப்புகள் உங்களைத் தேடி வரும் போது, அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள நீங்கள் தயாராக இருக்க வேண்டும். தற்போது ஸ்டாக் மார்க்கெட் உங்களுக்கு அதுபோன்ற வாய்ப்பை அளிக்கிறது. அதனால் தான் யூடிஐ இப்போது ஈக்விட்டி ஆப்பர்சுனிட்டிஃபண்டை வழங்குகிறது. யூடிஐ ஈக்விட்டி ஆப்பர்சுனிட்டிஃபண்டு யூடிஐ-ன் விரிவான நிதி நிர்வாக வல்லமையின் நன்மைகளைத் தரும். அதை கடந்த காலத்தில் அதன் அநேக ஈக்விட்டி சம்பந்த திட்டங்கள் மும்பை சென்செக்ஸில் வெற்றி கண்டுள்ளன என்பது உறுதிசெய்கின்றன. இந்த ஃபண்டு ஐந்து ஆண்டு க்ளோஸ் எண்டெட் வளர்ச்சி ஃபண்டாகும். இது மே 16.96 முதல் ஜூன் 29.96 வரை விற்பனையாகும்.

**UTI EQUITY OPPORTUNITY FUND**

நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் ரூ. 10-ன் முக மதிப்பில் குறைந்த பட்சம் 200 யூனிட்களை வாங்க வேண்டியதுதான். அதிகபட்ச வரையறை இல்லை. இந்த ஃபண்டு நேஷனல் மற்றும் மும்பை ஸ்டாக் எக்சேஞ்சுகளில் லிஸ்ட் செய்யப்படும். அதோடு 3 ஆண்டுகளுக்குப் பிறகு NAV அடிப்படை திருப்பி வாங்கும் விலையில் திரும்ப வாங்கிக்கொள்ளும் வசதியும் உள்ளது. யூடிஐ ஈக்விட்டி ஆப்பர்சுனிட்டிஃபண்டு. இது உங்கள் சிறந்த எதிர்காலத்திற்கு யூடிஐ தயாரிக்கும் வழி ஆகும். இந்த வாய்ப்பை நழுவ விடாதீர்கள்.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

ரிஸ்க் அம்சங்கள் : எல்லா மியூச்சுவல்ஃபண்டுகள் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யும் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவையாகும். மற்றும் செக்யூரிட்டிகள் மார்க்கெட்டை பாதிக்கும் அம்சங்கள் மற்றும் சக்திகளைப் பொறுத்து திட்டங்களின் NAV ஏறிடவும் இறங்கிடவும் செய்யும். கடந்தகால சாதனை வருங்கால முடிவுகளைச் சுட்டிக் காட்டுவதாகாது. ஃபண்டின் குறிக்கோள்கள் நிறைவேற்றப்படும் என்பதற்கு உறுதியளிக்க முடியாது. முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.

**விண்ணப்ப பாரங்கள் ஏற்றுக்கொள்ளப்படும் இடம்: அனைத்து யூடிஐ அலுவலகங்கள். மற்றும் முக்கிய பிரதிநிதிகள் கலெக்ஷன் மையங்கள்.**

**மேலும் விபரங்களுக்கும், விளக்கங்களுக்கும் ஏஜெண்டுகள், முக்கிய பிரதிநிதி நிகள். யூடிஐ அலுவலகங்களுடன் தொடர்பு கொள்ளவும்.**

CWPL/ UTI/ TAM/ 1029/ 96

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka